REGD. No. M. 1190.



# ஆனந்த போதினி

# ANANDA BODHINI

Vol. 29. பொருளடக்கம். No. 3.

ஸ்ரீ சுபானு ஞு புரட்டாசி மீ

உள்ளடக்கம். பக்கம்.







சே. இராஜு செட்டியார், எம். பி., பி. ஐ., அவர்கள் இயற்றியவை.

## காதலி? ஒரு இனிய அருமையான தமிழ் நாவல்

இதில் நவீன நாகரீகம், காதலின் வெற்றி, 'அவனன்றி ஓரணுவும் அசையாது', 'விதியின் வலி' என்னும் பல உயரிய நீதிகள், செல்வர்களின் ஆடம்பர வாழ்க்கை, சீர்திருத்தத்தின் சீர்கேடு ஆகிய பல அரிய அறிவைப் புகட்டும் அதியற்புத விஷயங்கள் அடங்கியிருக்கின்றன. **விலை ரூபா 0-12-0**

## நாகரீகம்?

'நாகரீகம்' என்ற உயர்ந்த பெயரை வைத்துக்கொண்டு இக்காலத்து நடைபெறும் பல போலி வழக்க ஒழுக்கங்களின் சீர்கேடுகளை ஒழிக்கவும், நீதியும், உண்மையும், அன்பும் நிலைகுலைந்து, மூலை முடுக்குகளில் தேங்கிக் கிடக்க, அநீதியும் பொய்யும் கொடுமையும் ஒருங்கு திரண்டு கரைகடந்து பெருகி வரும் பெரு வெள்ளத்தைத் தடுக்கும் அணைக்கட்டாக இந்நாவல் வரையப் பட்டது. இதில் உள்ளதை உள்ளபடியே எடுத்துக்காட்டி இந்தியர் எல்லோரும் ஒன்று சேர்ந்து அன்புடன் வாழ வேண்டுமென்று அரும் பெரும் நீதிகளடங்க பலதிறத்து மனிதர்களின் சுபாவத்தையும் போக்கையும் விளக்கிக் காட்டப்பட்டிருக்கிறது; இதில் ஜாதி சமூக கட்டுப்பாடுகளின் ஊழல்களும், ஆப்தமித்ரனின் அருங்குணங்களும், கருத்தொருமித்த காதலர்களின் அந்தரங்கப் பிணைப்பும், மோசக்காரர்கள் இறுதியில் நாசமுறுவதும், பல அத்தாட்சிகளோடு எடுத்துக் காட்டப்பட்டிருக்கிறது. இதை எல்லாரும் வாசித்து நற்பயனடைந்து இன்புறுவார்களாக. **விலை ரூபா 2-0-0**

## அன்பானந்தன் அல்லது அருஞ்செல்வன் விழைந்த பெருஞ்செல்வம்

இந்நூலின் கதாநாயகன் பெயரே இந்நூற்கும் பெயராய் அமைந்தது. **அன்பானந்தன்** என்னும் பெயரால் இரண்டு உண்மைகள் அறியலாகும்; அன்பு, ஆனந்தத்தில் முடிந்து அதனோடு ஒன்றாகி விளங்கும் என்பதொன்று; மற்றொன்று இந்நூல் எந்தப் பாஷையில் எழுதப் பட்டுள்ளதோ, எந்தப் பாஷை நமக்குத் தாய்ப்பாஷையாக வுள்ளதோ, அந்தப் பாஷையின் பெருமை இப்படிப் பட்டதென்பது. தமிழ் என்னும் சொல்லே இனிமை என்று பொருள் படும். அன்பைவிட இனிமையுள்ளது வேறில்லை. இவ்வன்பும் அவ்வினிமையும் கலந்தால் ஆனந்தம் பிறக்கத் தடையென்ன? இந்த ஆனந்தம் தமிழ்பாஷை முழுவதும் நிரம்பியிருக்கிறது என்பதைக் குறிப்பிக்கவே, தமிழ் எழுத்துக்களின் முதலெழுத்தாகிய '**அ**' என்பதும், இறுதி எழுத்தாகிய '**ன்**' என்பதும் இந்நூற் பெயர்க்கு முதலும் இறுதியுமாக அமைந்தன. **இதன் விலை ரூபா 1-4-0**

## சந்திரசேகரி

எளிய, இனிய நடையில் எழுதப்பட்டது. உலகானுபவமும் இலக்கண அறிவும் விசேஷமாகக் கொண்டது; அன்பின் மகிமை, பொறுமையின் பெருமை, கேடு நினைப்போர் கெடுவர், கடவுளை நம்பினோர் கைவிடப்படார் முதலிய பல அரிய விஷயங்கள் இதில் விளக்கமாகவும் படிப்போர் மனதைக் கவரக்கூடியதாகவும் எழுதப்பட்டிருக்கிறது. **இதன் விலை ரூபா 1-4-0**

---

**ஆனந்தபோதினி ஆபீஸ், தபால் பெட்டி நெ. 167, மதராஸ்.**

ஓம்
பரப்பிரஹ்மணே நம:

# ஆனந்தபோதினி

"எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பது அறிவு."—திருவள்ளுவர்.

| தொகுதி 29 | சுபானு௵ புரட்டாசிமீ கூ 1943௵ செப்டம்பர்மீ 17உ | பகுதி 3 |
|---|---|---|

## கடவுள் வணக்கம்.

பாரொடு விண்ணாய்ப் பரந்தஎம்பரனே!
பற்றுநான் மற்றிலேன் கண்டாய்!
சீரொடு பொலிவாய் சிவபுரத்து அரசே
திருப்பெருந் துறையுறை சிவனே!
ஆரொடு நோகேன் ஆர்க்குஎடுத்து உரைக்கேன்
ஆண்டநீ அருளிலை யானால்
வார்கடல் உலகில் வாழ்கிலேன் கண்டாய்
வருகஎன்று அருள்புரியாயே. (1)

வம்பனேன் தன்னை ஆண்டமாமணியே!
மற்றுநான் பற்றிலேன் கண்டாய்!
உம்பரும் அறியா ஒருவனே இருவர்க்கு
உணர்வுஇறந்து உலகம் ஊடுருவும்
செம்பெரு மானே! சிவபுரத்து அரசே!
திருப்பெருந் துறையுறை சிவனே!
எம்பெருமானே! என்னை ஆள்வானே!
என்னைநீ கூவிக்கொண்டு அருளே. (2)

பாடிமால் புகழும் பாதமேயல்லால்
பற்றுநான் மற்றிலேன் கண்டாய்!
தேடிநீ ஆண்டாய் சிவபுரத்து அரசே!
திருப்பெருந் துறையுறை சிவனே!
ஊடுவது உன்னோடு உவப்பதும் உன்னை
உணர்த்துவது உனக்கு எனக்கு உறுதி
வாடினேன் இங்கு வாழ்கிலேன் கண்டாய்
வருக என்று அருள்புரி யாயே. (3)



# மடங்களின் கடமை என்ன?

நம் நாட்டில் மத ஸ்தாபனங்கள் பலவுண்டு. சமணப்
பள்ளிகள், பௌத்த மடங்கள், சங்கரர் மடங்கள்,
சைவ மடங்கள், வைணவ மடங்கள் முதலியவை குறிப்
பிடத் தக்கவை. சைவ மடங்களில் தமிழ் நாட்டில் திருவாவடு
துறை மடம், தருமபுர மடம், திருப்பனந்தாள் மடம் ஆகிய மூன்று
மடங்கள் புராதனமானவையும் பிரபலமானவையு மாகும்.
பொதுவாக, இம் மத ஸ்தாபனங்கள், மக்களின் நல் வாழ்
வுக்கு வழிகாட்டி யுதவுவதற்காகவே ஏற்பட்டன. அதிலும்,
மேற்குறித்த சைவ மடங்கள் மக்களுக்கு நல்லறிவு ஊட்டி
நல் வாழ்வு வாழ்வதற்கு ஏதுவான சமய அறிவைப் பரப்புவ
தற்கும், தமிழ் மொழியை வளர்ப்பதற்குமே முக்கியமாக ஏற்
பட்டன. ஆனால், அம் மடங்கள் இப்போது இவ்வுயர் கொள்
கைகளை நிறைவேற்றும் முறையில் சேவை புரிகின்றனவா?
என்றால் பெரும்பாலும் இல்லையென்றே சொல்லவேண்டும்.
சைவ மடங்கள் என்று பெயரளவுக்குத்தான் அவை இருந்து
வருகின்றன. இம் மடங்களின் நிர்வாக ஊழல்களின் காரண
மாக, அடிக்கடி நீதிமன்றங்களில் விவகாரங்கள் நடந்து வரு
வதை நாம் பார்த்து வருகிறோமே யொழிய, நல்ல காரியங்கள்
செய்வதை நாம் அதிகமாக காணவில்லை. இவற்றையெல்லாம்
பார்க்கும்போது, இம் மடங்கள் இருப்பதைவிட, இல்லாம
லிருப்பதே மேல் என்று எண்ணவேண்டி யிருக்கிறது. கிறிஸ்
தவ மிஷனரிகள் தங்கள் நாடுகளில் மட்டுமன்றி, வெளி நாடு
களிலும் செய்யும் வேலைகளைப் பார்த்தால் பிரமிக்கத்தக்க வித
மாக இருக்கிறது. பாதிரிமார்கள் தங்கள் கிறிஸ்தவ மதக்
கொள்கைகளை உலகமெங்கும் பரப்ப வேண்டுமென்று வேலை
செய்தாலும், அம்மதப் பிரசார வேலையுடனேயே மக்களுக்கு
நலன் பயப்பதான காரியங்களையும் செய்து வருகிறார்கள்.
பள்ளிக்கூடங்கள் ஏற்படுத்தி மக்களுக்குக் கல்வி யறிவைப்

புகட்டுகிறார்கள். ஆஸ்பத்திரிகள் நிறுவி, நோயால் வாடும் மக்களுக்குத் தகுந்த சிகிச்சை செய்வித்துக் குணப்படுத்து கிறார்கள். நம் மடாதிபதிகள் இவ்வகையான சேவைகள் ஏதாயினும் செய்து வருகிறார்களா என்று நாம் கேட்கிறோம். கிறிஸ்தவ மிஷனரிகளைப் பின்பற்றி நம் நாட்டில் ஸ்ரீ இராம கிருஷ்ண மிஷன் ஆங்காங்கு பள்ளிக்கூடங்கள், ஆஸ்பத்திரி கள் முதலியவைகளை ஏற்படுத்தி வேலை செய்து வரு கிறது. சமீபத்தில் ஏற்பட்ட ஸ்ரீ இராமகிருஷ்ண மிஷன் கூட ஜன சமூகத்துக்கு நன்மை தரத்தக்கதான வேலையை செய்து வருவதைக் காணும்போது, பல நூற்றாண்டுகளாக இருந்து வரும் மடங்கள் தத்தம் கடமையைச் செய்யாம லிருந்து வருகின்றன என்றால், அதை என்னென்பது! 'நாங் கள் சமய நூல்களை வெளியிட்டு வழங்கி வருகிறோம்; தமிழ் மொழி பயிலும் மாணவர்களுக்குப் பலவித பரிசுகள் ஏற் படுத்திக் கொடுத்து வருகிறோம்' என்று திருப்பனந்தாள் மடத்தாரும், திருவாவடுதுறை மடத்தாரும் கூறலாம். அவை போதுமா என்பதுதான் நம் கேள்வி. இம் மடங்களுக்கு உள்ள செல்வத்தைக் கொண்டு எவ்வளவோ செய்யலாமே!

சமீபத்தில் தருமபுரம் மடத்தின் இருபத்து நான்காவது ஆதீன கர்த்தாவாகிய ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞான சம்பந்த பரமாசாரிய ஸ்வாமிகளின் பத்தாவது ஆண்டு ஆட்சி விழா நடைபெற்றது. தருமபுரம் சைவசமய சந்தான குரவர்களில் முதல்வராகிய மெய்கண்ட தேவர் பரம்பரையில் உதித்த சைவ சமயாசிரியர் வாழ்ந்த இடம் எனக் கூறப்படுகிறது. குருஞான சம்பந்தர் என்பவரே இந்தத் தருமபுர மடால யத்தை ஏற்படுத்தினார், அவர் முதலில் ஒரு சிறு ஆசிரமமாகக் கட்டி ஸ்தாபித்த இத் தருமபுர மடம், அவர் பின் வந்தவர்கள் முயற்சிகளால் படிப்படியாகப் பலப்படுத்தப்பட்டு இப்போ துள்ள செல்வாக்கான நிலையை யடைந்திருக்கிறது. இம் மடத் தின் ஆதிக்கத்தில் இப்போது இருபத்தேழு தேவஸ்தானங் கள் இருக்கின்றன. ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞான சம்பந்த பரமாசாரிய சுவாமிகள் தருமபுர மடத்தின் ஆதீன கர்த்தராக வந்த பிறகு பல நல்ல காரியங்களைச் செய்திருப்பதாகக் கூறப் படுகிறது. ஸ்ரீ மகா சந்நிதானம் தேவார பாடசாலை யொன் றையும் வேத சிவாகம பாடசாலை யொன்றையும் ஏற் படுத்தி யிருக்கிறார்கள். இப் பாடசாலைகளில் படிக் கும் மாணவர்களுக்கு இருக்க இடமும், உண்ண உணவும் அளிக்கப்பட்டு வருகின்றனவாம். சமய நூல்களை வெளி யிடுவதற்கென்று ஞான சம்பந்த அச்சகம் என்று ஒரு பதிப் பகமும், பிரசுர இலாகாவும் இருக்கின்றனவாம். சைவ சமய

உண்மைகளைப் பரப்புவதற்காக "ஞான சம்பந்தம்" என்ற பெயரோடு ஒரு மாதப் பத்திரிகை சென்ற ஆண்டு தொடங் கப்பட்டு வெளிவருகிறது. மடத்தின் பிரசுர இலாகா இது வரை இருபத்தெட்டு சமய நூல்களை வெளியிட்டிருக்கின்ற தாம். இவை இலவசமாகவும், குறைந்த விலைக்கும் கொடுக் கப்பட்டு வருகின்றனவாம். மகா சந்நிதானம் தாழ்த்தப்பட்ட மக்களின் உபயோகத்துக்காகப் பல கிணறுகளைக் கட்டி உதவி யுள்ளார்களாம். அதுவன்றி, மக்களுக்குப் பயன்தரத் தக்க சகல ஸ்தாபனங்களுக்கும் ஸ்ரீ மகா சந்நிதானம் உதவி புரிந்து வருகிறார்களாம். திருப்பதியில் கீழ்த்திசைப் பல் கலைக் கழகத்தின் ஆதரவில் நடைபெற்ற மகா நாட்டுக்குப் பொரு ளுதவி புரிந்தார்களாம். சென்னைத் தமிழ்ச் சங்கத்துக்கு நன் கொடை யளித்திருப்பதுடன், அதன் போஷகராகவும் இருந்து வருகிறார்கள். மற்ற மடாதிபதிகளைப் போலன்றி ஸ்ரீலஸ்ரீ சுவாமிகள் எளிய வாழ்க்கையையே மேற்கொண்டிருக்கிறார் கள் என்றறிய மகிழ்கிறோம். இவ்விதம், மற்ற மடாதிபதிக ளுக்கு வழி காட்டுவதுபோல, பல நல்ல காரியங்களைப் புரிந்து வரும், பண்டார சந்நிதி பட்டத்துக்கு வந்து பத்து ஆண்டு ஆன ஆட்சிக் கொண்டாட்'-த்தைக் கொண்டாடியது பொருத்தமானதே. இவ் விழாவை, திருவாங்கூர் திவான் ஸர், ஸி. பி. இராமசாமி ஐயர் தலைமை வகித்து நடத்தி வைத்தது குறிப்பிடத் தக்கது.

"500 ஆண்டுகளுக்கு முன், தருமபுர மடம் எதற்காக நிறுவப்பட்டதோ, அந்த நோக்கத்தை நிறைவேற்ற, பல துறை களில் மடத்தின் நிர்வாகம் அபிவிருத்தி யடைந்து வந்திருப்ப தைக் குறித்துப் பாராட்டுகிறேன். இந்து மத தர்மத்தையும் சைவ சித்தாந்தத்தையும் பரப்புவதற்காகத்தான் மடங்கள் ஏற்பட்டிருக்கின்றன; ஆதலால், மடாதிபதிகள் தங்களுக்கு ஏற்பட்டுள்ள கடமையை உணர்ந்து நடக்கவேண்டும். கிறிஸ் தவப் பாதிரிமார்கள் தங்கள் மதாபிவிருத்திக்காக எவ்வளவு தீவிரமாகப் பிரசாரஞ் செய்து வருகிறார்கள் என்பதை நாம் உணர்ந்து நமது இந்துமதமும் தர்மமும் ஓங்கி வளரத் தீவிர மாகப் பாடுபட வேண்டும்" என்று அவர் தமது சொற்பொழி வில் குறிப்பிட்டார்.

இரண்டாம் நாள் விழாவிற்கு இந்துமத பரிபாலன சபைத்தலைவர் ஸ்ரீ டி. எம். நாராயணசாமி பிள்ளை தலைமை வகித்தார். அவரும் தமது பிரசங்கத்தில், "காலவர்த்தமானத் துக்குத் தகுந்தபடி மடத்தின் நிர்வாகம் திருத்தியமைக்கப்

(102-ம் பக்கம் பார்க்க.)

# மனம் கவர்ந்த பெரியாழ்வார்

("ஹரன்")

## 1. "ஆதவனையும் அம்புலியையும் பார்!"

"ஓம்! ஓம்!" என்று எங்கிருந்தோ கிளம்பும் சங்கநாதத்தின் இனிய தொனி செவிகளிடையே பாய்கின்றது. "டர்ண்! டாண்!" என்று ஆலட்சமணி பீறிடுகின்றது வானத்தை. கீழ்த்திசையில் 'தக தக'வென பொற்தட்டு ஒன்று மிகுந்த ஜாஜ்வல்யத்துடன் எழுகின்றது. இவையெல்லாம் என் உள்ளத்தில் புகுந்துகொண்டு எனது எண்ண அலைகளைத் தூண்டிவிட்டன. இந்த அலைகள் எனது இன்பம் என்ற கடலில் எழுந்தவை. அஃதாவது இன்பக்கடலின் இன்பம் கட்டுமீறி விடவே, அதிகமான எண்ண அலைகள் காற்றின் ஆர்ப்பாட்டமில்லாமலேயே எழுந்து, வீசி, ஆர்ப்பரிக்க ஆரம்பித்து விட்டன.

உஷத் காலத்தில் வீசும் இனிய தென்றலின் பரிமளத்தை நுகர்ந்துகொண்டு வயல் வரப்புகளிடையே நடந்த வண்ணமிருந்தேன். அந்தக் காலத்தில் என்னைச் சுற்றிலும் அமைந்திருந்த அழகான காட்சிகளைக் கண்ணுற்ற போழ்து, எனது மனம் உடனே ஆழ்வார்களை எண்ணியது. "இயற்கையை சம்பந்தப்படுத்தியும், அவ்வியற்கையுள் கடவுளையும் சம்பந்தப்படுத்திய அன்னவர் திறமைதான் என்னே!" என்று ஒரு கணம் எண்ணினேன். மறுகணம் எனது நயனங்கள் கீழ்த்திசையை நோக்கின.

அங்கே விளங்கும் ஆதவனை மாணிக்கக்கட்டி என்பதா? வயிரம் என்பதா? பொன்னாலானவன் என்பதா? என்ற பெருத்த போராட்டம் என் மனத்திடை எழுந்து விட்டது. எனது இந்தப் பெரிய போராட்டம் பெரியாழ்வார் திருமொழிப்பகுதியின் ஒரு பாசுரத்தையும் தன்னிடை இழுத்துக்கொண்டது.

கிருஷ்ணன் அவதரித்து விட்டான். அவனைத் தொட்டிலில் இட்டுத் தாலாட்டுகிறார்கள்.

என்ன சொல்லித் தாலாட்டுகிறார்களாம்? "அழகிய கிருஷ்ணனே! நீ உறங்குவாயாக!" என்று மட்டும் சொல்லி நிறுத்திவிடுகிறார்களா? இல்லை; அந்த அழகிய சிறுவனுக்கு—அந்த அரிய பெரிய அவதார புருஷனுக்கு பல அடைமொழிகளைச் சேர்த்துக்கொண்டு தாலாட்டுகிறார்கள், அவன் உறங்குவதற்காக.

குழந்தையை—கிருஷ்ணனை-பார்க்கிறார்கள், தாலாட்டுகிறவர்கள். உடனே அவர்களுக்குச் சந்தேகம் பிறந்துவிட்டது போலும்!

"ஒ! ஒ! இப்படிப்பட்ட அரிய பெருமானை-குழந்தையை-எப்படிப் புகழ்வது?" என்று. ஆகவே அவர்களது கண்கள் குழந்தை இடப்பட்டிருந்த தொட்டிலை நோக்குகின்றன. உடனே தொட்டிலை வருணிக்கின்றார்கள்.

மாணிக்கம் வைத்து இழைக்கப்பட்ட தொட்டில்; வயிரம் இடையிலே வைத்துப் பதிப்பிக்கப்பெற்ற தொட்டில்; கண்ணன்

உறங்குவதற்காக இடப்பட்டிருக்கும் தொட்டில்; ஆணிப் பொன்னாலும் செய்யப்பட்டுப் 'பளீரெ'ன்ற பிரகாசத்துடன் முன் சொன்னவைகளோடு பொலிந்து நிற்கும் தொட்டில் என்றாலும் பொருந்தும். இவ்வளவும் சரிதான். இவ்வளவையும் வைத்திழைத்து, மிகவும் விருப்பத்துடன் யார் கண்ணனுக்குக் கொடுத்தனுப்பினார்கள் இந்தத் தொட்டிலை? அந்தத் தாலாட்டுகிறவர்களே சொல்லுகிறார்களே, "பிரம்மனால் உனக்கு இப்படிப்பட்ட அரிய தொட்டில் செய்யப்பட்டு அனுப்பப்பட்டிருக்கிறது. ஆகையினால் சிறுவனே, இந்த அரிய சிருஷ்டியில் கிடத்தப்பட்டிருக்கும் நீ உறங்குவாயாக!" என்று.

எதிரில் பொலிந்து விளங்கும் ஆதவனைக் கண்டவுடன் எனக்கு உடனே மாணிக்கம், வயிரம், பொன்—இவைகளின் எண்ணங்கள் மிகுந்தன. இப்போது பிரம்மனும் என் இதயக்கடலுள் அவன் சம்பந்தமான எண்ண அலைகளால் திடீரெனத் தாக்குண்டான்.

நான் பிரம்மனின் ஒரு சிருஷ்டி. என்னைச் சிருஷ்டி செய்த பிரம்மன் நான் கண்டு களிப்பதற்காகவே இந்த—என் முன் இலங்கும்—அரிய காட்சியினையும் சிருஷ்டி செய்திருக்கவேண்டும். இக் காட்சியை சிருஷ்டித்த அவனுக்கு இதை வருணிப்பதில் ஒரு கஷ்டமும் இராது என்றே எண்ணுகின்றேன். ஆனால் அவன் சிருஷ்டிப் பொருளான நான் மட்டும் இதை வருணிப்பதில் திண்டாடுகின்றேன்.

இங்நிலையில் வேறொரு பகுதியில் கூறிய பாசுரத்தால் என்னை இவ் வியற்கைக் காட்சிகளின் இன்பத்தில் மூழ்கடித்துத் திணற அடிக்கும் பெரியாழ்வார் எத்தனை இயற்கைக் காட்சிகளை வருணித்து, 'வேறொரு பொருளின் மூலமாக மற்றோர் பொருளை உணர்த்தல்' என்ற வித்தையைக் கற்றிருக்கவேண்டும்!

இஃது வித்தையா? அன்று, அன்று! தெய்வ மணம் கமழும் அவரது காவியத்தில் ஒளிரும் தனிப்பெரு மெய்ப்பொருளே என்றுதான் எண்ணுகின்றேன்.

இப்போது பாசுரத்தைப் பார்க்கலாம்:

"மாணிக்கங்கட்டி வயிரமிடை கட்டி
ஆணிப் பொன்னாற் செய்த வண்ணச்சிறு தொட்டில்
பேணி யுனக்குப் பிரமன் விடுதந்தான்;
மாணிக் குறளனே தாலேலோ! வையமளந்தானே தாலேலோ!"

[விடு தந்தான்-கொடுத் தனுப்பினான்; மாணி—பிரமசாரி; குறளன்—வாமனன்.]

தாலாட்டுபவர்களுக்குள் தாய் ஒருத்தியாக இருக்கிறாள் என்று வைத்துக் கொள்ளுவோம். அதாவது யசோதைப் பிராட்டி அங்கே யிருப்பதாக வைத்துக் கொள்ளுவோம்.

கிருஷ்ணன் தூங்கவில்லை. இரவில் வெகுநேரம் ஆகிவிட்டது. குழந்தையை எடுத்துக்கொண்டு வெளி உப்பரிகைக்கு வருகிறாள் யசோதை. வானத்தில் அமிர்தகலைகளுடன் சந்திரன்

இலங்குகின்றான். கிருஷ்ணன் தனது அழகிய வாயைத் திறந்து 'பளிச்' சென்ற வெண்மையான சிறு பற்களைக் காட்டி அந்த அம்புலியைப் பார்த்துச் சிரிக்கின்றான். பிறகு தனது சின்னஞ்சிறு கையை நீட்டி மாமதியை அழைக்கின்றான்.

யசோதை சந்திரனைப் பார்த்துவிட்டு தன் மகனுடைய முகத்தையும் செயல்களையும் பார்த்து விடுகிறாள் என்று வைத்துக் கொள்ளுவோம். தாய்மைக்குள்ள இயற்கை உணர்ச்சி பீறிடுவது சகஜம். உடனே குழந்தையை இறுகத் தழுவி, உச்சி முகர்ந்து, முத்த மிடுகிறாள் என்று கற்பனை செய்வோம். உடனே குழந்தையைத் தூக்கிக் கொள்ளுகிறாள் யசோதை. வானத்துச் சந்திரனைப் பார்த்து (இந்த நிலைமையில் நாம் அவளைக் கற்பனை செய்து கொண்டபடி) அவள் யாது கூறுகிறாள் ?

"ஏ, மாமதி ! நீ உனது முகத்தை எவ்வளவு மகிழ்ச்சிதான் பொங்கும்படியாகப் பிரகாசம் செய்து கொண்டாலும் **என் மகன்** முக ஒளிக்கு ஈடாக மாட்டாய்! ஆகையால் ஆச்சரியப் படத்தக்கவனாகிய என் பிள்ளை உன்னை யழைக்கின்றான்; நீ கடிதோடி வா!!"

இந்த இடத்தில் பெரியாழ்வாரின் கவிநயத்தைப் பாருங்கள். "சந்திரனையும் விடப் பிரகாசம் வீசும் முகமண்டலம் பொருந்தியவன் கிருஷ்ணன்," என்பதை அவர் ஒரு பாசுரத்தின் இரண்டு அடிகளில் வருணித்து விட முடியும். ஆனால், சாதாரணமாக 'ஒரு தாயக்குத் தனது சேயிடம் எத்தகைய அரிய நேசம் ஏற்படும்', 'அந்த நேசத்தில் ஒளிரும் அவளது தாய்மை எத்தகைத்து,' என்பதையும் நமக்கு விளக்க, யசோதையின் மூலமாக—அவளது தாய்மையின் மூலமாக,—"எனது கண்ணனின் முகம் சந்திரனைக் காட்டிலும் அதிகப் பொலிவுடையது!" என்பதையும் பெரியாழ்வார் கூறுவது என்னே ! என்னே !

இனி இந்தப் பாசுரத்தையும் கவனிக்கலாம்:

"சுற்றும் ஒளிவட்டம் சூழ்ந்து சோதி பரந்தெங்கும்
எத்தனை செய்யிலும் என்மகன் முகம் நேரொவ்வாய் !
வித்தகன் வேங்கடவாணன் உன்னை விளிக்கின்ற
கைத்தலம் நோவாமே அம்புலீ ! கடிதோடி வா !"

[வித்தகன்—ஆச்சரியப் படத்தக்கவன்;]

உஷத் காலத்தில் சந்திரனை நான் எண்ணியது சூரியனால் தான் ! ஆதவன் என்றால், அப்போது, அம்புலியும் எனது உள்ளத்தில் இன்ப உதயஞ் செய்திடுகிறானே ! இது ஏன் ?

இதற்கு, **"ஆதவனுடைய பிரகாசத்தில் ஆழ்ந்திருப்பார் எங்கள் கண்ணன் என்று மட்டும் எண்ணுகிறாயோ ? இதோ சந்திரனைப் பார் ! அவனை எண்ணிக்கோள். அவனது இனிமைக்கும் பிரகாசத்திற்கும் பன்மடங்கு மேலானவன் எங்கள் கண்ணன் ! இதையும் எண்ணிக்கோள் !"** என்று எனது உள்ளொளியில் உறைந்து கூறுகின்றாரே, அவர் பெரியாழ்வார்தானா?

அப்போது, எனது இந்த எண்ணத்திற்கு உறுதி பயப்பது போல் ஆலாட்சமணி இரண்டாந் தடவையாக ஒலித்தது.

# நவராத்திரியில் அம்பிகா பூஜை

(வீ. சங்கரய்யர்.)



சிவாலயங்களிலும், விஷ்ணு ஆலயங்களிலும், சைவ வைஷ்ணவ பேத மில்லாமல் நம் நாட்டில் ஆசரிக்கப்பட்டு வருவது தேவியின் நவராத்திரி உத்ஸவமே யாகும்.

நவராத்திரி உத்ஸவம் ஒவ்வொரு வருஷமும் இரு தடவை நடத்தப் படு கிறது. ஒன்று ஆச்வயுஜ மென்கிற சாந்திராயன ஐப்பசி மாதம் சுக்கில பக்ஷப் பிரதமை முதலும், மற்றொன்று சைத்திர மென்கிற சாந்திராயன சித்திரை மாதம் சுக்கிலபக்ஷத்துப் பிரதமை முதலும், ஒன்பது நாட்கள் கொண்டாடப்படுகிறது. இரண்டும் தேவீ பரமாகவும் ஸ்ரீராம பரமாகவும் நடத்தப்படுகிறது. ஏனென்றால் தேவியும் ஸ்ரீராமரும் தூர்வாசி யாமர் கள் (அறுகம் புல்லைப் போல் பச்சை நிறமேனி யுடையவர்கள்). அம் பிகையை விஷ்ணு சகோதரி எனக் கூறப்படுகிறது. ஸ்ரீராமர் அம்பிகை யின் ஸ்வரூபம் என்று அத்யாத்ம ராமாயணத்தில் கூறப்படுகிறது. தவிர, ஸ்ரீ வால்மீக ராமாயணத்திலும், ஸ்ரீராமர் காட்டுக்குப் புறப்படும் பொழுது சீதாபிராட்டி அவரை பெண்தான் புருஷ வடிவமாக அவதரித்தவர் என்ற பொருளுள்ள 'ஸ்திரியம் புருஷ விக்ரஹம்' என கூறி யிருக்கிறாள். பல பிரமாணங்களைக் கொண்டும் விஷ்ணுவும் அம்பிகையும் ஒன்றே யென்றே விளங்குகிறது. ஆகையால் ஈசுவரன் பத்னியான தேவியாகவோ அல்லது விஷ்ணுவின் அவதாரமான ஸ்ரீராமனாகவோ நவராத்திரியில் பகவானை ஆராதிக்கலாம்.

இந்த நவராத்திரி உத்ஸவத்தை இப்பொழுதும் மெக்ஸிகோ என்னும் அமெரிக்காவின் ராஜ்யத்தில் வெகு காலமாக 'ராம் லீலா' என்னும் பெய ரோடு கொண்டாடப்படுகிறது. ஒன்பதாவது நாள் அதாவது நவமியன்று அவர்கள் ஸ்ரீராமப் பட்டாபிஷேகமும் நடத்துகிறார்கள். "வாஸந்தே பிரதமே பக்ஷே | ஹ்யாரப்யப்ரதி பத்திதம் ||. படேத் ஸ்ரீராமசரிதம் | நவம் யாம்து ஸமாபயேத் ||" இதுபோலவே "ஆச்விநைப்ரதமே பக்ஷே.......... ஸமாபயேத்" என்ற வாக்யமும் இருக்கிறது.

ஒரு பெரிய குடும்பத்தில் பல குழந்தைகள் இருக்கலாம். சில குழந்தை கள் நல்லவர்களாகவும் சிலர் துஷ்டர்களாகவும் இருக்கலாம். ஆனால், தாயாரின் பிரியம் எல்லோரிடமும் ஒன்றுபோல் தான் இருக்கும். தாயார் குழந்தைகளை வளர்க்கிறாள், காப்பாற்றுகிறாள், நேசிக்கிறாள். இங்கே தாயும் குழந்தைகளும் அநித்தியமானவர்கள் அதாவது இறப்பவர்களே. பர தேவதையோ நித்யமான மாதா. மோக்ஷானந்தமாகிய பாலை நமக்கு ஊட்டி வளர்க்கிறவள்; அஞ்ஞானத்தைப் போக்கி ஞானததை பெற்று நித்யானந் தத்தைப் பெறுவதே நாம் பிறந்த நோக்கம் என்பதை ஒவ்வொருவரும் உணரவேண்டும்.

கண்ணீர் பெருக மனமுருகி இவ்வுலக விசாரமே யில்லாமல் அம்பி கையினிடத்தில் நமது ஆத்மா லயிக்கும் பொழுதுதான் தேவியின் ஞானப் பால் பருக முடியும். தேவியானவள் மஹிஷாஸுரன், பண்டாசுரன், சும்பாசுரன், நிசும்பாசுரன் இவர்களை சம்ஹரித்திருக்கிறாள். இவர்க ளெல்

லாம் அஞ்ஞானம் எனக் கூறுவதின் பிரதிமைகளே. அஞ்ஞானத்தைத் தொலைத்து ஞானப்பாலூட்டுபவள் தேவீ என்பதே இதன் உட்கருத்து.

அஷ்ட லக்ஷ்மீ ஸ்வரூபமான தேவியை நவாக்ஷரீ, ஷோடசாக்ஷரீ ஆகிய மந்திரங்களால் தோத்திரிக்கவேண்டும். நவராத்திரியில் குடும்பத்தில் ஒருவராவது மௌனத்துடன் க்ஷீரான்னம் மாத்திரம் உண்டு பரிசுத்த மனதுடன் குடத்திலோ, தீபத்திலோ, விக்ரஹத்திலோ, யந்திரத்திலோ ஆவாஹனம் செய்து இந்த ஒன்பது நாட்களும் பூசிப்பது மிகவும் சிலாக்கியம்.

## நவராத்திரி விரதம்

ஆச்வயுஜ சுக்லப் பிரதமையன்று ஆரம்பிக்கவேண்டும். ஆனால் அமாவாஸ்யையுடன் கூடின பிரதமை கூடாது. இது ஒன்பது தினங்களில் பூர்த்தியாகிறது. விஜயதசமி நாளையும் சேர்த்து இதை தசரா என்று கூறுவதுமுண்டு. ஆரம்ப தினத்தன்று சித்திரை நக்ஷத்திரமோ வைதிருதி நாமகித்திய யோகமோ கூடி யிருக்கக்கூடாது. அவை சென்ற பின்புதான் ஆரம்பிக்கவேண்டும். இவ் விரதம் இன்னும் பல பிரகாரத்திலும் அனுஷ்டிப்பதுண்டு.

(1) பிரதமை முதல் பஞ்சமி வரையிலும்.

(2) பஞ்சமி முதல் நவமி வரையிலும்.

(இவைகளுக்கு பஞ்சராத்ரம் எனப் பெயர். முதல்நாள் ஒருவேளை பகல் மட்டும் ஆகாரம், இரண்டாம் நாள் ஒரு வேளை இரவில் மட்டும் ஆகாரம், மூன்றும் நாள் கிடைத்ததை ஒரு தடவை மட்டும் சாப்பிடுவது, நான்காம் நாள் உபவாசம், ஐந்தாம் நாள் பாரணை செய்யவேண்டும் என்று விதி இருக்கிறது.)

(3) சப்தமி முதல் நவமி வரையிலும் திரிராத்ரம் எனக் கூறுவதுண்டு. பகலில் மாத்திரம் உண்ணலாம்.

(4) யுக்மராத்ரம் என்பது பிரதமை யன்றும் நவமி யன்றும் ஒரு வேளை யுண்பது.

(5) ஏகராத்ரம் நவமி யன்றே ஆரம்பித்து முடிப்பது ஒரு வேளைதான் உண்ணலாம். அதுவும் ஸாத்விக ஆகாரமே உண்ணவேண்டும்.

(6) தேவீ உபாஸகர்கள் லலிதா ஸஹஸ்ர நாமத்தில் கூறி யிருக்கிறபடி பிரதமை முதல் பௌர்ணிமை வரை பதினைந்து நாட்களும் கொண்டாடுகிறார்கள்.

ஆரம்ப தினத்தில் சுத்தமான வேதிகையில் நெல் அரிசி போட்டு அதன் மீது மூர்த்தி ஸ்தாபனம் செய்யவேண்டும். முதலில் கணபதி பூஜை, பிறகு ஸப்த மாதாக்களோடு கூடிய தேவிபூஜை, அஷ்ட திக் பாலக பூஜை செய்யவேண்டும்.

தேவியை மஹாகாளீ, மஹாலக்ஷ்மீ, மஹா ஸரஸ்வதீ ஸ்வரூபமாகவும் பூஜிப்பது நம் நாட்டு வழக்கம். சப்த சதி என்ற தேவீ மகாத்மிய பாராயணம் செய்வது மிகவும் முக்கியம். இதை தினமும் ஒரு தடவை பாராயணம் செய்தால் அபீஷ்ட சித்தியும் மூன்று தடவை சர்வசாந்தியும், ஐந்து தடவை ஸர்வபய நாசமும் ஏழு தடவை ஞானப்பிராப்தியும் பலன்.

தேவீ மகாத்மிய பாராயணத்தைப்போல குமாரீ பூஜையும் முக்கிய மானதே யாம். தினம் ஒரு குமாரி வீதமோ, கடைசி தினம் மாத்திரமோ குமாரீ பூஜை செய்வது நலம். இவ்வாறு ஒன்பது தினமும் பூஜை செய்து பின் தசமி யன்று தசாம்ச ஹோமம் செய்யவேண்டும்.

### (1) மஹாஷ்டமி, (2) மஹா நவமி

அஷ்டமியும் மூலமும், நவமியும் பூராடமும் கூடி யிருக்கும் தினம் விசேஷ தினமாம். சூரிய உதயத்தில் அஷ்டமியும், அஸ்தமனத்தில் நவமி யும், குருவாரமும் கூடியுள்ள தினம் மஹா விசேஷமாகும். மஹாநவமி யன்று நாம் ஸரஸ்வதி பூஜை செய்கின்றோம்.

### (3) விஜய தசமி

இத் தினத்தில் சிரவணம் சேர்ந்திருப்பது மிகவும் உத்தமம். இன்று மாலை நக்ஷத்திரம் காணும் வேளை மிக உத்தம சமயம். அதுவே விஜய காலம். அப் பொழுதுதான் தேவி ஜயிக்கிறாள். விஜயம் அடைகிறாள்.

இவ்வளவு மஹிமையுள்ள ஆச்வயுஜ நவராத்திரி இவ் வருஷம் புரட்டாசி மாதம் 14-ம் தேதி வியாழக்கிழமை ஆரம்ப மாகிறது. 21-ம் தேதி வியாழக்கிழமை மஹா நவமியும், 22-ம் தேதி வெள்ளிக்கிழமை விஜய தசமி யும் வருகிறது. இக்காலத்தில் யாவரும் தேவியை ஆராதனம் செய்து அவள் அருள் பெறப் பாடுபடும்படியாக எல்லா ஆஸ்திகர்களையும் கேட்டுக் கொள்ளுகின்றேன்.

---

## மடங்களின் கடமை என்ன?

(96-ம் பக்கத் தொடர்ச்சி.)

பட்டு வருவதைக் குறித்துப் பாராட்டுகிறேன். சமூக வாழ்வி லுள்ள குறைபாடுகளைப் போக்க முயலவேண்டும். இச் சைவ மடங்களுக்கும் சைவ மக்களுக்கும் சிறிதும் தொடர்பில் லாம லிருப்பதுபோல் ஒரு எண்ணம் இருந்து வருகிறது. சைவ மக்களும் மடங்களும் இணையவேண்டியது அத்தியாவசி யம். மனித சமூகத்தைத் திருத்தியமைக்க நல்ல பயிற்சி இன்றியமையாத தாதலால், ஸ்ரீ ராமகிருஷ்ண மிஷனைப்போல் மடத்துக்கு வருபவர்களுக்கு ஒரு உயர்தரப் பள்ளிக்கூடம் இருக்கவேண்டியது அவசியம். இந்த மடம் நம்முடையது என்ற உணர்ச்சி மக்களுக்கு ஏற்படவேண்டும். மடம் சமுகத் தொண்டில் ஈடுபடவேண்டியது அவசியம்" என்று அரிய யோசனைகள் கூறினார். இவ் விரு பேரறிஞர்களுடைய மொழி களை மற்ற மடங்களைச் சேர்ந்தவர்களும் கவனிப்பார்களாக. அப்போது தான் மடங்களின் தலையாய கடமை என்ன? என் பதை அவர்கள் நினைவூட்டிக் கொள்ள முடியும் என்று நாம் கூற விரும்புகிறோம்.

# போரிடும் நார்வே

(த. கிருஷ்ணமூர்த்தி.)

சென்ற எப்ரல் மாதம் 9-ம் தேதியுடன் நார்வே ஹிட்லரின் பேயாட்சிக்குட்பட்டு மூவாண்டுகள் நிரம்பி விட்டன. எனினும் மக்களின் சுதந்திர வேட்கை தணிய வில்லை. நாட்டின் வெளியிலிருந்து போர் புரிந்து வரும் வீரர்களின் மனம் சோர்வுறவில்லை; ஊக்கம் குறையவில்லை. லண்டன் நகரைத் தலைமை நகராகக் கொண்டு ஏழாம் ஹாக்கான் அரசர் தொழிலாளர் தலைவர் ஜான் நைகார்ட்ஸ்வோல்டு தலைமையில் அமைச்சர் குழாம் கொண்டு அரசு நடத்தி வருகிறார். 1940-ம் ஆண்டு எப்ரல் 9-ம் தேதி காலை 12-30 மணிக்கே முதன் முதல் ஜெர்மன் குண்டு நார்வே ராணுவ இலக்குகளின் மீது விழ ஆரம்பித்தது. அன்று எல்வரும் நகரில் கூடிக் கலந்த நார்வே பாராளுமன்றம் ஹாக்கான் வேந்தருக்கும் நைகார்ட்ஸ்வோல்டு அமைச்சர் குழாத்திற்கும் சர்வாதிகாரம் கொடுத்ததுடன் நாட்டின் வெளியினின்றும் போரை நடத்த அதிகார மளித்தது. அதன்படியேதான் இன்றைய லண்டன் சர்க்கார் நிர்வாகம் நடத்தி வருகிறது. இம் மந்திரி சபையில் எதிர்க்கட்சியினரும் பதவி வகித்து வருகின்றனர். பாராளு மன்ற தீர்மானத்தை அறிந்தவுடன் மன்னரையும் மந்திரி சபையையும் கைது செய்ய ஜெர்மானியர் முயன்றனர். பலிக்கவில்லை. எனவே 11-ந் தேதி (பாராளுமன்ற கூட்டத்திற்கு 2-நாட்கள் பின்னர்) நைபர் கண்டில் சர்க்கார் மோட்டார் வண்டிகள் செல்லுதலைக் கண்டு ஜெர்மன் விமானங்கள் அவைகளை நொறுக்க முயன்றன. எனினும், மன்னரும் மந்திரிமாரும் தப்பி தென்மேற்கு நார்வேயிலுள்ள மோல்டி நகரில் இரு வாரம் தங்கினர். முன் னெச்சரிக்கையின்றி திடீர் தாக்குதலினால் கிறிஸ்தியன் ஸான்ட், ஸ்டாவங்கர் விமான நிலையம்,! பெர்ஜன் கட்லோரக் கொத்தளம், ஆலிஸண்ட் முதலியவை ஜெர்மானியர் கையில் சிக்கவே, நார்வே சர்க்கார் வட நார்வேயிலுள்ள டிராம்ஸோ நகருக்கு மாறியது.

9-ம் தேதி ஜெர்மன் படை யெடுப்பைக் கண்டதும், பிரிட்டிஷாரும், பிரஞ்சுகாரரும் போலந்து ராணுவத்துடன் நார்வேயின் உதவிக்கு வந்தனர். நம்ஸாஸிலும் ஹார்ஸ்டாடிலும், ஆன்டால்ஸ்னனிலும் 13-ம் தேதியி லிருந்து 30-ம் தேதி வரை நேச தேச படைகள் இறங்கி தெற்கு நார்வேயிலும் வடக்கு நார்வேயிலும் ஜெர்மானியருடன் கை கலந்தன. எனினும், எதிரியின் பலமும் தொகையும் பெருகி வரவே, நேச தேசப் படைகள் பின் வாங்கின. இறுதியில்—ஜூன் மாதம் 7-ம் தேதி—63 நாட்கள் போர் புரிந்த பிறகு நார்வே சர்க்கார் மேலும் நார்வெயில் போர் புரிய இயலாதெனக் கண்டு லண்டன் போந்தனர். அதுகாலை நேச தேசத்தினர் வெற்றி கொள்வரெனவும் நம்பிக்கை தோன்றியது. நார்விக் துறைமுகம் ஜெர்மானியரிடமிருந்து பிடிக்கப்பட்டு அங்கிருந்த அவர்களது எல்லா போர்க் கப்பல்களும் அழிக்கப்பட்டன. எனினும், ஜெர்மானியருக்கு மேன்மேலும் உதவி வந்து

கொண்டிருந்தது. நார்வே சர்க்காருக்கு அவ்வளவாக வரவில்லை. அதனல் சில ஜெர்மன் கப்பல்கள் பிரிட்டிஷ் கண்காணிப்புக்கும் மீறி ஹெம்னல் பெர்ஜட் என்ற நகரை யடைந்து ஜெர்மன் படைக்குப் போதிய உதவி யளித்தன. எனவே, மேலுதவியின்றி நேசப் படைகள் போரை நிறுத்தி இங்கிலாந்திற்குப் பின் வாங்கின. ஆயினும், நார்வேயின் பல மரக்கலங்கள் காப்பாற்றப்பட்டன. அவைகள் இன்று பிரிட்டனுக்கு உணவும், போர்க் கருவியும் கொணரப் பேருதவி செய்து வருகின்றன.

மன்பாதையில் நார்வே மரக்கலங்கள் தொகையில் மூன்ரும் பதவி பெற்றிருக்கிறது. அவைகளில் 80-சத விகிதம் காப்பாற்றப்பட்டு விட்டன. இப்போரிலே ஜெர்மனி தனது கடற்படையில் கால் பாகத்திற்கு மேல் நார்வே படையெடுப்பில் காவு கொடுத்துவிட்டது. போர் துவங்கிய காலை கார்காட்டிலி (நார்வேயுக்கும் டென்மார்க்கிற்கும் இடையில் கிழக்கிலிருக்கும் ஜலசந்தி.) இந்த பிரிட்டிஷ் சப்மரின்கள் ஆஸ்லோ நகருக்குச் சென்றுகொண்டிருந்த பல ஜெர்மன் கப்பல்களை அமிழ்த்தின. தப்பிய பல கப்பல்களினின்றும் இறங்கிய ஜெர்மன் வீரர்களுடன் ஆஸ்லோவின் வெளிப்புறத்தில் சண்டையிட்ட நார்வே வீரர்கள் ஸ்வீடனுக்குப் பின்வாங்க வேண்டியதாகிவிட்டது. வாஸ், டென்மார்க் முதலிய பல இடங்களில் அவசர அவசரமாக படை அணி வகுத்தும் நார்வே சேனை ஜெர்மானியரிடை தோற்றது. நாட்டின் மக்களைத் திகிலுறச் செய்து பணிய வைக்க போடோ, கிறிஸ்தியன் ஸன்ட், ஆலிஸ்ஸனட் முதலிய நகரங்கள் தாக்கப்பட்டு பொசுக்கப்பட்டன.

போர் துவங்கியதும் நார்வே சர்க்கார் சமுத்திரத்திலிருந்த எல்லா கப்பல்களுக்கும் யுத்தத்தைக் குறித்த செய்தியைக் கம்பியில்லாத் தந்திமூலம் அனுப்பினர். சர்க்கார் இறுதியில் லண்டன் குடியேறியபோது எல்லா நார்வே கப்பல்களும் நேச நாட்டுத் துறைமுகங்களை அண்டின. இப் போரின்போது போலந்து நாட்டில் ஆர்சல் சப்மரின் பல ஜெர்மன் போர்க்கலங்களை அமிழ்த்தியது. இன்றைய நார்வே கடற்படையில் மிகவும் தேர்ச்சிபெற்ற 40,000 மாலுமிகள் நேச நாடுகளின் வெற்றிக்காகப் பாடுபடுகிருர்கள். ஸ்வீடனிலிருந்து சில நார்வே கப்பல்கள் ஜெர்மன் கண்காணிப்புக்கு மீறி இங்கிலாந்திற்கு வந்தன. அதுகாலை சில ஜெர்மன பீரங்கிக்கு இரையாயின. இன்றும் நார்வேயிலிருந்து சுதந்திர தாகமுள்ள இளைஞர்கள் பாய்மரக் கப்பல்கள் மூலமாகவும், படகுகள் மூலமாகவும் நார்வேயிலிருந்து தப்பித்து வடகடல் வழியாக ஸ்காட்லந்து வந்து லண்டன் நார்வே சர்க்காரின் படையில் சேர வந்துகொண்டிருக்கிருர்கள். இம் முறை ஆபத்தாயினும் இளம் பெண்களும் சுதந்திரப்பற்ருல் வருவதும் நோக்கற்பாலது. ஜெர்மன் படையெடுப்பில் நஷ்டமடைந்த 54 கப்பல்கள் போக எஞ்சிய 1024 கப்பல்களை நிர்வகிக்க லண்டனில் ஒரு கழகம் நிறுவப்பட்டுள்ளது. அதன் 41 கிளைகள் பல நாடுகளிலும் பரவியிருக்கின்றன. இக் கப்பல்கள்மூலமாகவே

கீழ்திசையில் போர்புரியும் நேசநாட்டுப் படைகளுக்குப் பெட்ரோல் போர்க்கருவிகள் முதலியவை வந்துகொண்டிருக்கின்றன. இக் கப்பல் கழகம் பிரிட்டனிலும் அமெரிக்காவிலும் மேலும் பல கப்பல்களைக் கட்டி வருகிறது. நார்வேயில் கப்பல்களில் பெரும்பாலும் சென்ற யுத்தத்தின் பிறகே கட்டப்பட்டவை யாதலால் நவீன சாதனங்களுட னிருந்து வருகின்றன. மாலுமிகள் கடலில் மூழ்காமலிருக்க எல்லா வசதிகள் செய்யப்பட்டிருக்கின்றன.

நார்வேயின் போர்க் கப்பல்கள் தென்மேற்கு பஸிபிக்கிலும், மத்தியதரைக் கடலிலும், அட்லாண்டிக் கடலிலும், இந்துமகா சமுத்திரத்திலும் நடைபெறும் கடற்படை போராட்டத்தில் தீவிரமாய் கலந்துகொண்டு வருகிறது. ஜப்பான் கீழ்திசையில் போர் துவக்கிய காலே நார்வேயின் கடற்படையும் பங்கெடுத்துக்கொண்டது. நார்வேயிலிருந்து தப்பி வரும் இளைஞர்கள் முக்கியமாக கடற் படையிலேயே சேர்ந்து வருகிறார்கள். ஐக்கிய நாடுகளில் நார்வே கடற்படை பயிற்சி நிலையமும், கனடாவில் டோரன்டோ நகரில் நார்வே இளைஞர்களுக்கு விமானி பயிற்சிகூடமும் லண்டனில் ராணுவக் கல்வி மன்றமும் நிறுவப்பட்டுள்ளன. தப்பி வரும் பெண்கள் மருத்துவ தாதிகளாய் பதிவுசெய்து கொள்ளுகிறார்கள்.

வர்த்தக கப்பல்களின் மூலமாக் வரும் வரும்படியைக் கொண்டே லண்டன் நார்வே சர்க்காரும் இதர நார்வே ஸ்தாபனங்களும் இன்று நடைபெறுகின்றன. அமெரிக்காவில் ஆதியில் குடியேறிய நார்வே மரபினர் மக்கள் சந்ததியாரும் பொருளுதவி செய்து வருகிறார்கள். இக் கஷ்ட காலத்திலும் நார்வே சர்க்கார் சமாதான காலத்தில் வாங்கிய அந்நிய நாட்டுக் கடன்களுக்குள்ள வட்டியை ஒழுங்காகக் கொடுத்து வருவது பாராட்டற்பாலது. ஜெர்மனி படை யெடுத்தபோது டென்மார்க் மாதிரி நார்வேயும் எதிர்க்காதிருந்தால் இன்று அது நேசநாட்டினருக்கு ஊளித்து வரும் கப்பல் வசதிக ளனைத்தும் ஜெர்மனியைச் சேர்ந்திருக்கும். மேலும் நார்வே படையெடுப்பில் ஜெர்மன் கடற்படை நஷ்டமடையாம லிருந்தால் அதனைக் கொண்டு ஹிட்லர் அவ்வாண்டிலேயே இங்கிலாந்தின் மீது படையெடுத் திருக்கலாம்.

போரில் நேச நாடுகள் வெற்றியுறுவது திண்ணமென்றும் அதற்குத் தனது பங்கிற்கேற்ற அளவுதான் உதவி புரிந்து வருகிறதாகவும் நார்வே நம்புகிறது. ஆகவே, போரின் இறுதியில் நடைபெறும் திட்டங்களில் அதற்குரிய ஸ்தானமு மளிக்கப்படுமென்பது உறுதி. லண்டன் சர்க்கார் மாதிரி நார்வே மக்களும் ஹிட்லர் கொடுங்கோ லாட்சிக்குப் பணியாம லிருப்பதும் போற்றற்பாலது. குவிஸ்லிங் சர்க்காரை ஏற்காமல் உயர்தர நீதிமன்ற தலைவர்கள் பதவிகள் ஒருங்கே துறந்ததும், கல்வி போதகர்கள் நாஜி கல்வி முறையை ஏற்கத் தயாரில்லை என்று கூறியதும் ஜெர்மனியைத் திகைக்கச் செய்து விட்டன. ஆகவே நார்வே உண்மை சுதந்திரத்தை அண்மையில் அடையுமெனக் கூறவும் வேண்டுமோ?

# கலியாண சுந்தரரின் கலியாணம்

(எஸ். தங்கவேலு பி. ஏ.,)



கலியாண சுந்தரர்க்குக் கலியாணம்!
காசினி யெல்லாம் வைபோகம்!
தலையான பண்டிதர்க்குக் கலியாணம்!
தமிழக மெல்லாம் கொண்டாட்டம்!
தேசபக்த னெனும் திருநாமம்
திகழச் செய்தான் திறம்வாழ்க!
மாசில் உணர்வாய் நவசக்தி
மலரச் செய்தான் மனம்வாழ்க!
தமிழ்ச்சோலை தனில் தமிழ்த்தென்றல்
தவழச் செய்தான் தமிழ்வாழ்க!
அமிழ்தத் தமிழில் அறவுரைகள்
அள்ளிவழங்கும் அருள் வாழ்க!
முருகன் அழகை நாடெங்கும்
முகிழ்க்கச் செய்தான் முருகாழ்க!
திருமால் அருளை வேட்டெவரும்
சிறக்கச் செய்தான் சீர்வாழ்க!
கண்ணின் மணியாய்க் காதலினைக்
கட்டிக் காக்க மாந்தரெலாம்
பெண்ணின் பெருமை பேசியவன்
பெருமை என்றும் தான்வாழ்க!
அராவு லாவும் சடையப்பன்
அன்பர்க் கன்பாய் எந்நாளும்
இராம லிங்கந் திருவுள்ளம்
இயல்பிற் பெற்றான் இதம்வாழ்க!
யாரும் எங்கும் எந்நாளும்
எம்மத மதுவும் சம்மதமாய்ப்
பாரும் என்றொரு சன்மார்க்கம்
பரப்பிய பெரியோன் பறைவாழ்க!
பாட்டாளி களின் பாடெல்லாம்
பார்த்தே உள்ளம் நைந்துருகிக்
கூட்டா ளியனாய் சேவகனாய்க்
குருவாம் குரவன் குறிவாழ்க!
தன்கடன் என்னைத் தாங்குவதே
தாங்கிட விரையா னாயிடினும்
என்கடன் பணியிற் கிடப்பதுவே
என்றுள மகிழும் இயல்வாழ்க!
இமய மலைக்கே ஏகாமல்
இதய மலைமேல் இனிதேறிச்
சமரச தியானம் தனிலாழும்
சாதுவின் போதம்தான் வாழ்க!

# திரு. வி. க. ஜென்ன ஜாதகம்

'திரு. வி. க. மணி விழா மல்'ரான 'நமது 'ஆனந்தபோதினி' ஆவணி மாத இதழில் 'சிம்ம ராசி' என்னும் தலைப்பில் திரு. வி. க். வின் ஜெனன ஜாதகம் வெளியிட்டிருப்பதில், 'அங்காரக'னுடைய ஸ்திதி (Position or Location) தவருக விருப்பதைத் திருத்தி, அதன்படி பலனையும் காணுவது வருமாறு:—

| | | | |
|---|---|---|---|
| | கேது | லக் சனி சந் | அங்காரகன் |
| | இராசி குண்டலீ | | குரு |
| | | | சூர் சுக்ரன் |
| | | ராகு | புதன் |

விருஷபம்

| | | | |
|---|---|---|---|
| (12) கேது | (1) நெப்டியூன் | சனி (2) சந் அங்கா | (3) குரு |
| (11) | பாவ குண்டலீ | | (4) சுக்ரன் |
| (10) | | | (5) சூர்ய புதன் |
| (9) | (8) | (7) | (6) யுரேன ராகு |

குறிப்பு:—'அங்காரக'னுடைய ஸ்புடம் பாகை-69 கலை-33. இதர கிரகங்களின் ஸ்புடங்களும்—பாவ ஸ்புடங்களும் சென்ற இதழில் உள்ளவைகளைப் பார்த்துக் கொள்ளவும்.

உதய பாவத்தில் 'நெப்டியூன்' (வருணன்) என்னும் கிரகம் உதய லக்ன மத்ய பாகையை அடுத்து ஆரோகணமாக எழுந்து கொண்டிருக்கிறது. அதுவே உதயக் கிரகம் (Rising Planet) ஆகையால், ஜாதகத்தின் பலன்கள் முழுவதும் ஆளுகின்ற கிரக் (Ruling Planet of the Native's Destiny) மாகிறது. உதய பாவாதிபன் சுக்ரன் க்ஷேத்திர பாவத்தில் (நான்காம் இடத்தில்) கேந்திர வலுப்பெற்று இருக்கிறது.

தர்ம-கர்மன் (ஒன்பது - பத்து இந்த பாவங்களின் அதிபன்) சனி தன (இரண்டாம்) பாவத்தின் ஆரம்பத்திலும், சௌர்யாதிபதி (மூன்றும் பாவன்) சந்திரன் தன பாவத்தின் மத்ய பாகையை அடுத்தும், லட்சிய-வியன் (ஏழாம்-பனிரெண்டாம் பாவன்) அங்காரகன் தன பாவத்தின் அந்தியத்தை நோக்கியும் ஸ்திதி பெறுகின்றன.

க்ஷேத்திர பாவன் (நான்காம் இடத்தின் அதிபன்) சூர்யன் இதய (ஐந்தாம்) பாவன் புதனுடன் பஞ்சம திரிகோணத்திலும்,

---

கலியாண சுந்தரனார் வாழ்க வாழ்க!
கருத்துறையும் உள்ளொளியும் வாழ்க வாழ்க!
நலியாத வாழ்விலவர் வாழ்க வாழ்க!
நாளும் சமரசதீபம் வாழ்க வாழ்க!

விதி-விய (எட்டாம்-பதினொன்றும்) பாவன் குரு சௌர்ய (மூன்றும்) பாவத்திலும் இருக்கின்றது.

சந்திரன்-புதன்-குரு இவர் மூவரும் உச்ச மர்கும். இவர்களில் புத-குரு இவர்களுக்கு மூலத்திரிகோண பலம் வாய்த்திருக்கிறது.

சந்திரனுக்கு பாவமத்யத்தை நெருங்கிச் செல்லும் ஆரோக்ண பலம் இருப்பினும், இராசி அந்தத்தில் அது ஸ்திதி பெற்றிருக்கிறது. அங்காரகன் பாவர்ந்திர மாயினும் இராசியின் முதற் பகுதியில் இடம் பெறுகிறது.

குருவின் அருள் விழி லட்சிய-சித்தி (ஏழாம்-பதினொன்றும்) பாவங்களுக்கும், லட்சிய பாவன் அங்காரனுடைய பலன் மிகுந்த (வென்றி தரும்) பார்வை பஞ்சம—பாக்கியத் (ஐந்தாம்—ஒன்பதாம்) தலங்களுக்கும், சனியின் விழி சுக்ரனுக்கும், ராஜ்ய-லாப (பத்தாம்-பதினொன்றும்) பாவங்களின் பின்-முன் பகுதிகளுக்கும் கிடைத்திருக்கிறது.

இவ்வித பலங்களில் பலன் தருங் கோள்கள் அனைத்தும் உதயந்தொட்டு பஞ்சமம் ஈருகவுள்ள பாவங்கள் ஐந்திலும் இடங் கொள்கின்றன. இராசிகளில் விருஷபம் முதல் கன்னி வரை ஐந்திலும் சூஜாதிபஞ்சக் கிரகங்களும் ஸ்திதி பெறுவதால், யாய்க்கும் யோகம் நிரந்தரமானது. அங்காரகன்—புதன்-சனி இவர்களுக்கு சசி கேந்திர ஸ்திதி வலு வாய்த்திருக்கிறது.

**உடு மகாதிசை:—**

ஜனன காலத்தில் **அங்காரக** மகர்திசையில் தொடங்கி **தன**-பஞ்சமாதிபதி **புத**னுடைய மகாதிசை இதுகால் நிகழுவதில் கேது புத்தி 1943-ம் ஹு ஸெப்டெம்பர்மீ 8 தேதியுடன் பூர்த்தியாகிறது. அதன்மேல் **சுக்ர** புத்தி ஹு 2 மீ 10-ம் 1946-ம் ஹு ஜூலைமீ 8வ வரை இருக்கிறது.

இப்பொழுது நிகழும் திசாதிபன் புதன் தன-பஞ்சமங்களுக்கு ஆதிபத்யம் உள்ளவனாய், பஞ்சம திரிகோணத்தில் மூலத்திரிகோண உச்சபலம் பெற்றவனாய், லட்சிய-வியனான அங்காரகனுடைய சதுர்த்த கேந்திர விழி கிடைக்கப்பெற்று க்ஷேத்திர பாவனான சூர்யனுடன் கூடி இருக்கின்றான். இதனால் இத்திசை நற்பலன்களுக்குரிய தென்று கூறவேண்டும். உயர்ந்த லட்சியங்களையுடைய ஜாதகருக்குப் பலன் தரும் நல்ல செல்வாக்கையும்—வெற்றியே சூழ்ந்த இனிமைகளையும் நெடுகிலும் பலனாக இத்திசை முழுவதும் இருக்கும்.

புக்திநாதன் சுக்ரனுடைய பலன் கீர்த்திப் பிரபலங்களில் மிக்வும் அனுயாஸமான ஆர்ஜித பலங்களைப் பெருக்குவதில் முக்கியம் கொண்டதாக விருக்கும். உள்ளக் கிடக்கைகளின்படி நல்லன பலவும் உலகுக்கு உபகாரமாக கிரியாம்சைக்கு வரும். இவ்வகைப் பலனைச் சரியாய்க் காணுவதில் 1944-45-ம் வருஷம் தக்க நிகழ்ச்சிகளை வைத்திருக்கிறது என்னலாம்.

அருள் கனிந்த அவருடைய உள்ளத்தின் விழைவுகள் அனைத்தும் நேர்மை நெறிகளில் இனிதே நிறைவேறுவதாக!

# சைவம் பழுத்த மனம் படைத்தார்

(மகாமகோபாத்தியாய—பண்டிதமணி—மு. கதிரேசச் செட்டியார்)

திருவாளர். திரு. வி. கலியாணசுந்தர முதலியார் அவர்களை யான் முப்பது யாண்டுகளுக்குமுன் தூத்துக்குடிச் சைவ சித்தாந்த சங்கத்திற் கண்டு அளவளாவிய துண்டு. அப்பொழுது இவர்கள் தமிழாசிரியராகவும் சைவநூற் பயிற்சியுடையாராகவும் காணப்பட்டார்கள். இவர்கள் முதலிற் பேச யான் கேட்டது சிவஞானபோத முதற் சூத்திரத்தைப் பற்றிய சொற்பொழிவாகும். எடுத்துக் கொண்ட பொருளைச் செவ்வையாக வரையறை செய்து கொண்டு தெளிவான தமிழ் நடையிற் பேசினர். இளம் பருவத்தில் இவர்களுக்கமைந்த பேச்சு வன்மையைக் கண்டு எதிர்கால உருவம் என் உள்ளப் படத்தில் அப்பொழுதே வனப்புற அமைந்ததுண்டு. பின்னர் நாட்டுத் தொண்டி லீடுபட்டுத் "தமிழ்ப்புலவர் உலகியலறியார்" என்போர் எண்ணத்திற்கு மாறாக அத்தொண்டர் தலைமணியாக் விளங்கினர்கள். கேட்போர் உணர்ச்சி ததும்பும்படி நாட்டு மக்கள் நலங் குறித்து இவர்கள் பேசிய சொற்பொழிவுகளை அரசியற்றுறையிற் றலைசிறந்து விளங்கும் ஆங்கில மொழிவல்லார் பலரும் பாராட்டிப் பரவசப் பட்டதுண்டு. அரசியலறிவு ஒருபாற் சிறக்க மற்றொருபால் பெண்ணுரிமை நலத்தைப்பற்றிய உழைப்பு இவர்கள் பால் பெரிதும் சிறந்தது என்னலாம்.

சமயப் பகுதியில் சமரசக் கொள்கையுடைய ரெனினும் சிறு பருவத்தில் வேரூன்றிய சைவமணம் இவர்கள் உள்ளத்தாமரையை எங்ஙனம் விட்டகலும்? சில ஆண்டுகளுக்கு முன்னர் இவர்களை நாட்டுத் தொண்டில் மிகுதியும் ஈடுபட்ட நிலையிற் கண்ட நண்பர் சிலர் சமயப்பற்றில் குறைவுடையராக இருக்கலாமெனக் கொண்டு இவர்கள் தலைமை தாங்கிய சில அவைகளில் பெரியபுராணத்தை இழித்துப் பேசினராக, அதனைப் பொருத இவர்கள் உள்ளந் துடித்து அப்பேச்சை வெறுத்தும் பெரியபுராணப் பெருமையை விரித்தும் பேசிய சொற்பொழிவை இன்றும் அறிஞர் பலர் பாராட்டுவர். இவர்கள் பேச்சுக் கேட்போர் உள்ளங்களைத் தன் வயப்படுத்து இன்புறச் செய்யும் இயல்பினது; எழுதும் உரை நடையும் அன்னதே.

பெண் மக்கள் கல்வியிலும் நாகரிகத்திலும் உயர்வடைய வேண்டு மென்பதும் அன்பினலன்றி அடிமை முறையால் வாழ்க்கை யிருத்தலாகா தென்பதும் இவர்கள் குறிக்கோள். இதற்கு இவர்கள் நூல்களும் பேச்சுக்களும் தமிழ் நாட்டிற் பரந்தெழுந்தன. ஏழைத் தொழிலாளர் நலங் கருதிச் செய்து வரும் தொண்டிலும் இவர்கள் பின்வாங்கினவர்க ளல்லர்.

இங்ஙனம் தமிழ்ப் புலமையோடு தமிழ் மக்கள் நலங் குறித்துச் செய்ய வேண்டிய பலவகைத் தொண்டுகளிலும் ஈடுபட்டுழைத்துவரும் நம் முதலியாரவர்களின் அறுபதாம் யாண்டு நிறைவுறுதல் நம்மனோர்க்குப் பெரிதும் உவகையளிப்பதொன்று.

# விஞ்ஞான வளம் நுண்கலையைத் தூண்டல்

:(0):

(டி. பி. நவநீதகிருஷ்ணன், M. A.)



**ப**ண்டைக்காலத்து மக்கள், காலாந்திரத்தில், உணவைச் சேகரித்துச் சேமித்து வைக்கும் வழிகளிலும், வேட்டையாடுவதிலும், தேர்ச்சி யுற்றனர். ஆதலின், இரை தேடுவதிலேயே தம் பொழுதை முற்றும் கழித்துவரும் நிலைமை சிறிது மாறியது. நாடோறும், உணவுப் பொருள்களை நாடி அலையும் தொல்லை குறைந்தது. தினமும் விலங்குகளை வேட்டையாடும் அவசியம் ஏற்படவில்லை. அவ்வப்போது வேட்டையாடி, பல விலங்குகளைக் கொன்று, அவற்றின் இறைச்சியைக் கெட்டாவண்ணம் ஊற வைத்துக்கொள்ளவும் அவர்கள் அறிந்தனர். பண்டைக்காலத்து மக்களில் சிலர், குறித்த பருவ காலங்களில் விலங்குகள் ஓரிடமிருந்து மற்றோரிடம் செல்வதைக் கண்டனர். அவ்வாறு, அவை, ஓரிடமிருந்து மற்றோரிடம் செல்லும்போது, அவை சென்ற வழி மலைகளிடையுள்ள குறுகிய கணவாய்களினூடே சென்றது. அக்கணவாய்களுக்கு அண்மையில், பண்டைக்கால மக்களில் சிலர், ஏற்ற பருவ காலங்களில், பாளையமிறங்கிப் பாடி வீடுகள் அமைத்துத் தங்கினர். கணவாய்கள் வழியே, விலங்குகள் திரள் திரளாகக் கடந்தபோது, அவற்றைத் தந்திரமாய் மடக்கிச் சூழ்ந்து, அம் மக்கள், வேட்டை யாடினர். இங்ஙனம் வேட்டையாடப்பட்டு கொல்லப்பட்ட விலங்குகளின் இறைச்சியைத் தக்க வகையில் ஊறவைத்துப் பக்குவமாக்கி, பல திங்கட்கான உணவைப்பற்றின கவலையின்றி, அம்மக்கள் வாழ முடிந்தது. இவ்வாறு, அவர்கள் வேட்டையாடிக் கொன்ற விலங்குகளின் எலும்புகளாலான குவியல் மேடுகள் பலவற்றை, மக்கள் உற்பத்தி நூலறிஞர் கண்டு பிடித்துள்ளனர். மகா வாரணங்கள் (மாமத்ஸ்) என்ற யானையை விடப் பன்மடங்கு பெரியவையான விலங்குகள் பண்டைக்காலங்களில் இருந்தனவெனவும், அவ்வினமே, இப்பொழுது

---

தமிழன்பர்களின் கைம்மாறு இவ்விழாக் கொண்டாட்டத்தி லீடுபட்டுச் சிறப்பித்தலன்றி வேறியாதுளது? திரு. வி. கலியாணசுந்தரனார் இவ் வறுபதாம் யாண்டு போல் மற்றோர் அறுபதாம் யாண்டும் நிறையப் பெற்றுத் தமிழன்னைக்கு வேண்டும் பணிபுரிந்து தமிழ் மக்கள் இன்புறும் நிலைகண்டு தாமும் இன்புற்று வாழும் வண்ணம் அம்மையப்பராகிய இறைவன் திருவருள் துணைபுரிக வென வேண்டுகின்றேன்.

மறைந்து விட்டதெனவும், மக்கள் உற்பத்தி நூலறிஞர், தாம் வெட்டி யெடுத்த எலும்புக்கூடுகளை ஆராய்ந்ததால் கண்டனர். அவ்வாறான மகாவாரணங்கள் பல்லாயிரக்கணக்கில் கொல்லப் பட்டன வென்பதைத் தெளிவாக்கும் வண்ணமான பெரும் எலும் புக்குவியல் மேடுகள் கிடைக்கின்றன. இவ்வாறு பெருவாரியாக் உணவுப்பொருள்களைச் சேமித்து வைத்ததின் விளைவாய், அக் காலத்து மக்கள் பலர், எப்பொழுதும் இரைதேடித் திரியும் தொல்லையின்றி, அவ்வப்போது இளைப்பாற இயன்றது. இத னால், பல மக்களின் வாழ்க்கையில் ஓய்வுப் பொழுதும் ஏற்பட்டது. வேட்டை நிமித்தம், பல குடும்பங்கள் ஒன்று சேர்ந்த குழுக் களாலான சமூக ஒழுங்கு முறையும் நிறுவப்பட்டது. இவ்வாறு நிறுவப்பட்ட ஒழுங்கு முறையும், மக்கள் வாழ்நாட்களில் ஏற்பட்ட ஓய்வும், மக்களைத் தம் கவனத்தை வேறு துறைகளில் செலுத்து மாறு செய்தன. இதனால் உண்பதும் உறங்குவதும் மட்டுமே வாழ்க்கை யன்று, வாழ்க்கையில் வேறு பல நலங்களும் இருக்க லாம் என்ற எண்ணம் அம்மக்களில் எழுந்தது. தாம் வசித்து வந்த கரடுமுரடான குகைகளைவிடச் சொகுசான இருப்பிடங்களை யேற்படுத்திக் கொள்ளலாம் என எண்ணினர். கற்கள் கொண்டு கட்டிடங்கள் கட்டலாயினர். அவ்வாறு கட்டிடங்கள் கட்டும் அறி வில் அவர்கள் தேர்ச்சியுற லாயினர். இங்ஙனம் வாழ்க்கையில் 'அழகு அல்லது நேர்த்தியானது' என்ற அமிசமும் ஒன்று உண்டு என்ற நுண்கலை யுணர்ச்சி அவர்களில் பிறந்தது. கட்டி டங்கள் தோற்றம் நேர்த்தியா யிருக்கவேண்டும், கற்களின் கரடு முரடுத்தன்மையை மாற்றி, அவற்றைத் தேய்த்து மழமழப்பாக்க வேண்டும் என்றவை போன்ற மனோகர வியலான கலை நோக் கத்தின் பாற்பட்ட அறிவும் அவசியமாயிற்று. முன்னரே, உண வின் பாற்பட்ட சுவை யுணர்ச்சியை மக்கள் அறிந்திருந்தனர். இப் பொழுது, காட்சி—ஊறு என்பவற்றின் பாற்பட்ட சுவையுணர்ச்சி யும் விருத்தி யாயிற்று. ஆதலால், அவர்களிடை இரசஞானம் சிறிது தோன்றிற்று. இதனால், அவர்கள் நோக்கம் விரி வடைந் தது. மக்கள் வாழ்க்கையில், பண்பாடு (Culture) என்றதோர் புது அமிசமும் புகுந்தது.

காலாந்திரத்தில், உலகின் பல பாகங்களை மூடி யிருந்த உறை பனிப்படலங்கள் கரைந்து, உலகின் சீதோஷ்ண நிலைமையும் சீர் பட லாயிற்று. இதனால், நிலம் வள மடைந்து பயிர்கள் செழித் தன. இதைப் பின்பற்றி விலங்குகளும் கொழுத்துத் தழைத் தன; அவற்றின் தொகையும் பெருக்க மடைந்தது. அக்காலத்தே, தற்காலத்து மக்களின் மூதாதையர், அதன் முன்பிருந்தவரி னின்று வேறானதோர் இனமாய்ப் பரிணமித்தனர். இவ்வாறு புத்தினமாய்ச் சிறந்து தோன்றிய மக்கள் உலகத்தின் வளத் தைத் தம் வாழ்க்கை வளமுறும் வகையில் பயன்படுத்த லாயி னர். நானாவிதமான கருவிகளை யுண்டாக்கினர். கருவிகளைச் செய்யவல்ல சிறந்த கருவிகளைக் கட்டினர். வில்லாயுதமெனும் புதுமையைக் கண்டு பிடித்தனர். இதுவே முதன்முதலாய்க்

கண்டு பிடிக்கப்பட்ட பொறியியலான சாதனம் (மெகானிக்ல் எஞ்சின்) எனலாம். ஏனெனில், சொல்லலாம். சாதாரணமாய், க்ருவிகள் கொண்டு வேலை செய்யும்போது, மக்களின் ஆற்றல் உடனேயே, செய்யப்படுகின்ற வேலையாகின்றது. வில்லை நாணேற்றி அம்பு தொடுத்து, நாணைப் பின்னே இழுக்கும்போது, விற்கொம்பு மேலும் வளைகின்றது. அப்பொழுது வில்லாளியின் ஆற்றல், விற்கொம்பை மெதுவாய் வளைக்கப் பயன்படுகின்றது. அவ்வாற்றல், வளைந்துள்ள விற்கொம்பில் சேமிக்கப்படுகின்றது. இழுக்கப்பட்ட நாணை விடும்போது, அதனின்று அம்பு கிளம்புகின்றது. அப்பொழுதே, மிக்வும் வளைந்திருந்த விற்கொம்பு, அதன் முன்னைய நிலைக்குச் சடுதியில் நிமிர்கின்றது. அக்கணத்தே, சேமித்து வைக்கப்பட்டிருந்த ஆற்றல் திடீரென வெளிப்படுகின்றது. அவ்வாற்றலே அம்பு செல்லும் வேகத்திற்கும், குறிபார்த்த பொருளைத் துளைக்கும் வலிமைக்கும் ஆன காரணமா யுள்ளது. ஆகவே, வில் வித்தையில், ஆற்றல் உடனே வேலையாவதில்லை. சிறிது சிறிதாய்த் திரட்டப்பட்டு, சேமித்து வைக்கப்பட்ட ஆற்றல், பின்னர், வேலை செய்யப் பயன்படுகின்றது. இவ்வாறு, திரட்டிச் சேமித்து வைக்கப்பட்ட ஆற்றல், பின்னர், வேலை செய்யப் பயன்படுகின்றது. இவ்வாறு, திரட்டிச் சேமித்து வைக்கப்பட்ட ஆற்றலைப் பின்னர் வேலையாய் மாற்றுதற்கான சாதனங்கள், 'பொறியியல் சாதனங்கள்' எனப்படுகின்றன.

உலகில் பெருவாரியாய்த் தோன்றிய விலங்குகளை எதிர்த்துப் போராடவும், அவற்றைக் கொல்லவும் மக்கள் முற்பட்டதின் விளைவாய், மேலும் திருந்தியவையும், செம்மையானவையும் ஆன ஆயுதங்களை அவர்கள் கண்டுபிடிக்க வாய்த்தது. அவ்வாறு வாய்த்த பல பிரமேயங்களும் ஒன்றுபட்டதால், மக்கள் வாழ்க்கை நிலையாய்த் தரித்தவாறு நலமுற்றது; வாழ்நாட்களில் ஒழிவான வேளைகளும் அதிகமாயின. இதனால், மக்கள் தொகையும் பன்மடங்கு அதிகமாயிற்று. இக்காலத்தே மகா வாரணங்களும் முற்றிலும் அழிக்கப்பட்டனவாகி, அறவே ஒழிந்து மறைந்தன. இதைக் கருதுங்கால், அக்கால மக்கள் வலிமிக்க ஆயுதங்களைக் கொண்டே, அப்பெரும் விலங்குகளைத் துவம்சம் செய்திருக்க வேண்டும் என மக்கள் உற்பத்தி நூலறிஞர் அனுமானிக்கின்றனர். வேட்டையி லீடுபட்ட மக்கள் அதிகமானது அவர்களது விலங்கு நூல் பாற்பட்ட அறிவு சிறத்தலானது, வேட்டையின் ஏற்பாட்டு முறை செம்மையானது என்றவையும் அப்பெரும் விலங்குகளின் பூர்ண சங்காரத்திற்கான காரணங்கள் என மக்கள் உற்பத்தி நூலறிஞர் மேலும் கூறுகின்றனர்.

வேட்டுவத் தொழிலில் தேர்ந்தவரான அக்காலத்து மக்களது வாழ்க்கையில் ஒழிவான நேரங்களும் அதிகமாயின. சுறுசுறுப்பான சுபாவமுடைய அம் மக்களால், ஒழிந்த நேரத்திலும் சும்மா இருக்க முடியவில்லை. ஆதலால், அவர்கள், தமது ஒழிவு வேளை

களிலும், ஒல்லும் வகை வேலை செய்து, ஒப்பற்ற ஓவியக்கலை யொன்றைத் தோற்றுவித்தனர். தாம் கண்டவற்றைக் கண்ட வாறே காட்டும் தத்ரூபமான சித்திரங்களை, அவர்கள் வரைந்த னர். எளிதில் எட்டிக் காண இயலாதுள்ளவையான குகை களின் பக்கச்சுவர்களில், வாய்மையுடன் வரையப்பட்ட வசீகர மான வரிப் படங்களையும், திவ்வியமான வர்ணங்கள் கொண்டு தீட்டப்பட்ட ஓவியங்களையும், அவர்கள் நமக்கு விட்டுச் சென் றுள்ளனர். அச்சித்திரங்கள், சிறந்த விலங்குகள் ஓடுவது போலவும்—பாய்வது போலவும், இன்னோரன்னவை யானது மான சுறு சுறுப்பான வினைகளில் ஈடுபட்டிருக்குங்காலுள்ள தோற்றங்களைக் காட்டுகின்றன. ஜீவகளையுட னுள்ளனவான படங்களை வரைவதின் நிமித்தம், அவை குறிக்கும் விலங்கு களை வேட்டையாடும்போது, மந்திரவியலான சகாயம் கிடைக்கும் என்ற நம்பிக்கையே, அவர்களை அவ்வாறான படங்களை வரையத் தூண்டிற்று என மக்கள் உற்பத்தி நூலறிஞர் கூறுகின்றனர். அச்சித்திரங்களின் செம்மை நோக்கிக் கருதுங்கால், அவற்றைத் தீட்டிய வேட்டுவ ஓவியக்காரரது விலங்கியல்பாற்பட்ட அறிவு மிகவும் வளர்ச்சி யுற்றிருந்தது என ஏற்படுகின்றது. அவர்கள் பல வித மீன்களதும், மான்களதும் நுட்பங்களைச் செவ்வனே அறிந்திருந்தனர். இருதயம், உடலின் முக்கியமான உறுப்பு என்பதை அவர்கள் நன்கறிந்தனர் என, அவர் வரைந்து விட் டுச் சென்றுள்ளதான சித்திரமொன்றினின்று தெளிவாகின்றது. அம்பினால் ஊடுருவப் பட்டுள்ள இருதயத்தை வெளிக்காட்டும் காட்டெருமையின் படமொன்றை, அவர் நமக்கு விட்டுச் சென் றுள்ளனர். அது, அப்படத்தை வரைந்தவரான வேட்டுவ ஓவியக்காரரின் விழுமிய நோக்கத்தைக் குறிப்பிடுகின்றது என்ப தில் ஐயமில்லை.

விஞ்ஞானம் வளர்ச்சி யுற்றமையின், மக்கள், இரைதேடி அலையும் அல்லலினின்றும் சிறிது விடுபட்டனர். அதனால் வாழ்க்கையில் ஓழிவு ஏற்பட்டது. அவ்வொழிவின் விளைவாய், அறிவு—உணர்ச்சி—கற்பனை—செயல் என்ற நாலுங் கலந்த நுண் கலைப் பயிற்சி வாய்த்தது. இதுவே இயற்கைக்கியைந்த வளர்ச்சி. இவ்வழியை விட்டு, இக்காலத்து மக்கள் வெகுதூரம் வழிதப்பி அலைந்து விட்டனர். சரியான வழிக்கு என்று மீள்வரோ!



# மகளிரைப் பழிப்பது தகுதியல்ல

(க. சிதம்பரம் பிள்ளை.)

ஆனி மாதத்து "ஆனந்தபோதினி"யில் "மகளிரைப் பழிப்பது தகுதியா?" என்ற தலைப்பில், பாரதம் பழம் பொருந்து சருக்கத்தில் திரௌபதி தன் மனக்கிடக்கையை வெளியிடும் "ஐம்புலன்களும்போல்" என்று தொடங்கும் கவியின் சரியான பொருள் என்ன? என்று கேட்டிருக்கிறார் அன்பர்—துரை.

மேற்சொன்ன கவியின் சரியான பொருளைத் தெரிந்துகொள்வது பற்றி வெகு நாட்களாக நானும் முயற்சி செய்திருக்கிறேன்; படித்த பெரியோர்கள் பலரிடம் அதைப் பற்றிக் கேட்டிருக்கிறேன்; ஆனால், சரியான பொருள்மட்டும் இதுவரை கிடைக்கவில்லை.

திரௌபதிக்கு பாண்டவர் ஐவர் பதிகளாக இருந்தபோதிலும், அவள் கன்னனிடத்திலும் ஆசை வைத்திருந்தாள் என்று சிலர் சொல்வதுண்டு. அப்படி அவள் கர்ணனை விரும்பினதாக வில்லிபுத்தூரார் பாரதத்திற் காணவில்லை. இருந்தால், அது எந்த இடத்தில் என்பதைத் தெரிந்து கொள்ளவும் விரும்புகிறேன்.

இனி, மேற் சொன்ன கவியின் முற்பகுதிக்கு அன்பர்—துரையார் கொண்ட அபிப்பிராயம் பொருந்துமா? 'கற்பில் அருந்ததியை நிகர்த்த துரோபதை ஐம்புலன்களைப் போல் பாண்டவர் ஐவர் தலைவர்களாக இருக்கவும், மற்றும் ஒருவன் எனக்குக் கணவனாக வேண்டுமென்று என் உள்ளம் உருகுமோ?' என்று அவள் சொன்னதாக அவர் அபிப்பிராயப் படுகிறார்.

உன்னுடைய உள்ளத்திற் கிடக்கும் 'மறை' என்ன?' என்று கேட்டால், என்னுடைய உள்ளக் கிடக்கை 'இதுதான்' என்று மற்றவர்களைப் போல் அவளும் சொல்லி விட்டுப் போகாமல், 'கற்பிற் சிறந்த என்னுடைய பேரிதயம் இன்னொருவனை விரும்புமா?' என்று எதற்காக அவள் திருப்பிக் கேட்க வேண்டும்? நீ, அப்படி யாரையாவது விரும்புகிறாயா என்று கேட்டாலல்லவோ அவ்வாறு பதில் சொல்ல வேண்டும். கேள்வி அப்படியில்லையே!

துரோபதை ஒரு கற்புடைப் பெண்டிர். அவளுடைய கற்புக்கு மாசு கற்பிக்கும் நோக்கம் பாரதத்தில் எந்த இடத்திலும் வில்லிபுத்தூராருக்கு இருந்ததாகத் தெரியவே இல்லை. அப்படியானால், மேற்படி செய்யுளுக்குப் பொருள் தான் என்ன? நான் நினைக்கிறேன், மேற்படி கவியில் அச்சுப்பிழை ஏதேனும் நேர்ந்திருக்குமோ என்று.

துரோபதைக்கு பாண்டவர் ஐவர் பதிகளாக இருந்தபோதிலும், அர்ச்சுனனிடத்தில் அவள் பிரத்தியேக அன்பை வைத்

திருந்திருக்கிருள். ஏன்? அவள் பிறந்ததே அர்ச்சுனனுக்காக. அறிவு வந்த நாள் முதல் அவள் தனது காதற் கொழுநன் அர்ச்சுனன் ஒருவனே என்று, அவனிடத்தில் உண்மைக்காதலை வைத்தே வந்திருக்கிருள். அர்ச்சுனனை அவள் நேரிற் பார்த்திரா விட்டாலும், அவனுடைய உருவப் படத்தை தோழிகள் காண்பிக்க, அதிலிருந்து அர்ச்சுனனுடைய உருவம் அவள் மனதிற் பதிந்தே இருந்தது.

பாண்டவர் அரக்கு மாளிகையில் இறந்துபட வில்லை என்று சிலர் சொல்லக் கேட்டு, அவர்களை வரவழைக்கும் நோக்கத்தில் துரோபதையின் தந்தையாகிய துருபதன், 'வில்வளைத்து இலக்கை வீழ்த்துகிறவர்களுக்குத்தான் இனி துரோபதையை விவாகஞ் செய்து கொடுக்கிறது' என்ற ஒரு நிபந்தனையை ஏற்படுத்தி, அதற்காக எல்லா தேசத்து அரசர்களையும் வரவழைக்கிருன். ஏன்? அப்பேர்ப்பட்ட காரியத்தை வில்விசயன் ஒருவனுல் தான் செய்யமுடியு மென்றும், விசயன் எங்கிருந்தாலும் அப்பொழுது அங்கு வந்தே தீர்வான் என்றும் அவனுக்கு நம்பிக்கை இருந்ததினுல்.

வில் வளைத்து இலக்கை வீழ்த்தக் கூடியவர்களுக்கு தன் மகளை விவாகஞ் செய்து கொடுப்பதாக பாஞ்சால மன்னன் ஏற்பாடு செய்திருந்த போதிலும், துரோபதைக்கு மட்டும் நம்பிக்கை குலைய வில்லை. எப்படியும் தான் ஆதியில் வரித்த அன்பன் வந்து தன்னை மணப்பான் என்று அவள் உண்மையாக நம்பியே இருந்தாள். ஒருக்கால் அர்ச்சுனன் வராமல் வேறு எவரேனும் வில் வளைத்து இலக்கை வீழ்த்தி விட்டால், தான் உடனே அக்கினியில் வீழ்ந்து உயிரை விட்டு விடுவதாகவும் அவள் மனதுக்குள் தீர்மானித் திருந்தாள்.

துரோபதையை அலங்கரித்து தோழிகள் சுயம்வர மண்டபத்திற்கு அழைத்து வந்து, அங்கு கூடியிருந்த துரியோதனன், கர்ணன் முதலிய அரசர் ஒவ்வொருவருடைய பெயரையும், அவர் தம் பெருமைகளையும் எவ்வளவோ எடுத்தெடுத்து அவளுக்குக் கூறுகிருர்கள். ஆனல், அவள் மட்டும் அவர்களில் எவரையும் ஏறெடுத்தும் பார்க்க வில்லை.

அரசர் ஒருவராலும் வில்வளைக்கக் கூடாமற் போகவே, கடைசியில், அந்தணர் வரிசையில் மாறுவேடத்துடன் இருந்த அர்ச்சுனன் வந்து வில்லை வளைத்து இலக்கை வீழ்த்தி விடுகிருன். அப்பொழுது அவனை யாரென்று துரோபதை தலை நிமிர்ந்து பார்க்கிருள். அர்ச்சுனன் என்னதான் மாறுவேடம் பூண்டிருந்தாலும் இயற்கை உருவத்தை எப்படி மாற்ற முடியும்? தன் மனக்கோயிலில் குடிவைத்துப் பூசித்துவரும் அந்த உண்மை உருவம் அப்படியே அவளுக்குக் காட்சியளிக்கிறது. தான் காதலித்த அன்பன் இவனே என்று அவள் உள்ளம் தீர்மானித்து

விடுகிறது. உடனே அவள் அர்ச்சுனன் கழுத்தில் மாலையைச் சூட்டி விடுகிருள்.

துரோபதை காதலித்த தெல்லாம் அர்ச்சுனன் ஒருவனை மட்டுந்தான். ஆயினும், பாண்டவர் ஐவரையும் அவள் மணந்து கொள்ள வேண்டு மென்றும், அவர் ஒவ்வொருவ ரிடத்தும் முறையே ஒவ்வொரு வருடம் வீதம் கூடி வாழ்ந்துவர வேண்டு மென்றும் அவள் கட்டாயப் படுத்தப் படுகிருள். சிலகாலம் கழிந்தபின் துரோபதை தருமனுக்கு மட்டுமே மனைவியாக இருந்து வரவேண்டு மென்றும், மற்றை நால்வரும் அவளை சொந்தத் தாயாக மதித்து வரவேண்டு மென்றும் ஏற்பாடு செய்யப்படு கின்றன.

இவ்வித நிர்ப்பந்தங்களும் ஏற்பாடுகளு மெல்லாம் முக்காலங் களும் உணர்ந்த வியாசர், நாரதர் ஆகிய முனிவரர்களால் தக்க முகாந்திரங்களுடன் கட்டாயப் படுத்தப்படும் பொழுது, அபலை யாகிய துரோபதை என்ன செய்வாள்? அவைகளுக் கெல்லாம் உடன் படுவதைத் தவிர அவளுக்கு வேறு வழி யில்லை. பெரி யோர் வார்த்தைகளை மறுக்க முடியாமல் அவ்வேற்பாடுகளுக் கெல்லாம் அவள் என்னதான் இணங்கினபோதிலும், அவள் உள்ளம் மட்டும் அர்ச்சுனன் என்ருல் உருகவே செய்தது.

காதல் இலக்கணத்தைத் தெரிவிக்கும் அகப்பொருள் நூல் களிலாவது, பண்டைச் சரித்திரங்களை விவரிக்கும் இதிகாச புரா ணங்களிலாவது ஒரு பெண் ஒன்றுக்கு மேற்பட்ட ஆடவரை மணஞ்செய்து கொண்டதாகத் தெரிய வில்லை. பாரதம் ஒன்று மட்டுமே அப்படிக் கூறுகிறது.

பாரதம் ஒரு வடநாட்டுச் சரித்திரம். ஆதியில் அதைப் பாடினவர் வியாசர் என்னும் ஆரிய முனிவர். அவர் அதை வட நாட்டு ஆரிய மக்களின் அக்காலத்துப் பழக்க வழக்கங்களைப் பெரிதுந் தழுவியே பாடியிருப்பார் என்பதிற் சந்தேகமில்லை.

ஆரிய மக்களின் பழக்க வழக்கங்களுக்கும், தமிழ் மக்களின் பழக்க வழக்கங்களுக்கும் சிற்சில மாறுபாடுகள் அடிப்படையான கொள்கைகளில் உண்டென்பது மெய்யே. ஆனல், கம்பருடைய கவி நயத்தைப் பெரிதுந் தழுவி பாரதத்தை தமிழில் மொழி பெயர்த்த வில்லிபுத்தூரார், அதைப் பெரும்பாலும் தமிழ் நாட் டுப் பழக்க வழக்கங்களுடன் இணைத்தும், 'காதல்' என்ற பொரு ளுக்கு உலகம் புகழும் தமிழ் நாட்டுக் காதலின் தாத்பரியத்தைக் கொடுத்தும் பாடியிருப்பார் என்றே எண்ணுகிறேன். நிற்க,

காதல் என்பது தெய்வீகம் வாய்ந்தது. அது, மக்கள் இவ் வுலகத்தில் தலைசிறந்த இன்ப மொன்றுண்டு என்பதை அறிந்து அனுபவித்து மகிழ்வதற்காக ஆண்டவனல் ஆண் பெண் இரு பாலாரிடத்திலும் இயற்கையிலேயே அமைத்து வைத்திருக்கும் அரும் பொருளாகும். அதன் முழு நலத்தையும் மனமொத்த

காதலன், காதலி ஆகிய இருவராலுமே அனுபவித்து மகிழ முடியும். ஒரு பெண் ஒன்றுக்கு மேற்பட்ட ஆடவரிடத்திருந்தாவது, ஒரு ஆண் ஒன்றுக்கு மேற்பட்ட மகளிரிடத்திருந்தாவது அத்தலை சிறந்த காதல் இன்பத்தை அனுபவித்து மகிழ முடியாது.

காதல் என்ற அரும் பொருளுக்கு கடவுள் கற்பித்திருக்கும் உண்மை நிலை மேற்சொன்ன வகையில் அமைந்திருப்பதால், அதிலிருந்து துரோபதை மட்டும் எப்படி விலகி நிற்க முடியும்? அதனால், காதற்கனியின் உயர்ந்த சுவையை அப்படியே அவள் அனுபவித்து மகிழ்தற்கு அர்ச்சுனன் தலை சிறந்த காதலனாகவே இருந்தான். இருந்து என்ன பயன்? அவன்தான் அவளை சொந்த தாயாகப் பாவிக்கவேண்டியவ னாயிற்றே!

இருந்தாலும், அவள் உள்ளத்தை யாரால் தடுக்க முடியும்? அது அர்ச்சுனனிடத்தில் பிரத்தியேக அன்பை வைக்கத்தான் செய்தது. 'அர்ச்சுனன் ஒருவனே எனது அன்பு அவ்வளவையும் ஒருங்கே சொரிவதற்குரிய பெருங்கொழுநனாக அமைந்திருக்கக் கூடாதா?' என்று அவள் எண்ண மிடுவதுண்டு. அதனால் தான் துரோபதை, தான் உண்டு மகிழ விரும்பிய நெல்லிக்கனியைப் பறித்துத் தரும்படி தனது காதற்கனியாகிய பார்த்தனை வேண்டிக்கொண்டது.

காதலைப் பொறுத்த வரையில் துரோபதைக்கு அர்ச்சுனனிடத்தில் அப்படி யென்றல்லாமல், மற்றெந்த வகைகளிலும் மனிதனுக்குப் பஞ்சப்புலன்கள் எப்படியோ, அப்படியே திரௌபதிக்குப் பாண்டவர் இன்றியமையாப் பொருள்களாக விளங்கினர்.

துட்டர்களைத் தொலைத்து அறத்தை நிலைநிறுத்துவதற்காக அவதரித்தவர் கிருஷ்ணர். அவர் அதைச் செய்து முடிப்பதற்கு எப்படி பாண்டவர்களைக் கருவியாக உபயோகப்படுத்த எண்ணினாரோ, அதேபோல் அவர்களை கடைசியில் நற்கதியில் சேர்க்கவும் எண்ணியே இருந்தார்.

மனிதன் அவ்வித நற்கதியை அடைய வேண்டுமானால், அவனுடைய உள்ளம் கள்ளங் கபடமற்று மாசு தீர்ந்து, பளிங்குபோற் பிரகாசிக்க வேண்டும். உள்ளொன்று வைத்துப் புறமொன்று செய்கிற மனதுக்கும் நற்கதிக்கும் வெகுதூரம். ஆதலால், பாண்டவர்களின் உள்ளத்தைப் பரிசுத்தம் செய்து வருவதும் கிருஷ்ணரின் நோக்கங்களுள் ஒன்றாக இருந்தது.

பாண்டவர்களும் திரௌபதியும் இயற்கையாகவே நல்ல உள்ளம் படைத்தவர்கள்; என்றாலும், எப்பேர்ப்பட்டவர்களையும் எடுத்து விழுங்கி விடுகிற எல்லாம் வல்ல மாயை பாண்டவர்களை மட்டும் சும்மாவிட்டு விடுமா? அதனால், சிற்சில மாசுகள் அவர்கள் உள்ளங்களிலும் படிந்தே இருந்தன. அவ்வித கறைகளைத் துடைத்து உள்ளங்களைத் தூய்மை செய்வதற்குப் பாண்டவர்

களின் வாழ்நாட்களிற் பல சந்தர்ப்பங்களை பயன்படுத்தி யிருக்கிறார் கிருஷ்ணர். அவ்வித சந்தர்ப்பங்களுள் ஒன்று இந்தப் பழம் பொருந்தச் செய்த சந்தர்ப்பமும்.

பாண்டவர் ஐவரையும் பதிகளாக ஏற்றுக்கொண்ட போதிலும், துரோபதைக்கு பார்த்தனிடத்தில் பிரத்தியேக அன்பு உண்டென்னும் செய்தி துரோபதைக்கும், பரமார்த்மர் என்ற நிலையில் கிருஷ்ணருக்கும் மட்டுமே தெரியும். பாண்டவர்களில் மற்றை நால்வருக்கும் அவ்வுண்மையை வெளிப்படுத்தாமல் வைத்திருப்பது அவளுக்குப் பதித் துரோகமாய் நேரும் என்பது கிருஷ்ணரின் கருத்து. ஆதலால், அதை வெளிப்படுத்தி அவள் உள்ளத்தை தூய்மை செய்யத்தக்க காலம் அதுதான் என்று தீர்மானித்து விடுகிறார் கிருஷ்ணர். "உற்றது சொன்னால் அற்றது பொருந்தும்" என்ற கொள்கையை ஏதுவாகக் கொண்டு திரௌபதியும் பாண்டவர்களுமாகிய அறுவர் உள்ளங்களையும் அது அதைப் பொறுத்த வரையில் சுத்தி செய்து, நெல்லிக்கனியையும் பழைய படியே மரத்திற் போய் பொருந்தும்படி செய்து விடுகிறார் கிருஷ்ணர்.

துரோபதை அர்ச்சுனனிடத்தில் பிரத்தியேக அன்பைக் கொண்டிருப்பது பற்றி நால்வருக்கும் எவ்வித மனக்குறையும இல்லை யென்றாலும், அது காரணத்தால் அவளுக்கு, அந்த அளவுக்கு, கடைசி காலத்தில் அதாவது சொர்க்கஞ் செல்லுங் காலத்தில் அவள் எதிர் பார்த்த எண்ணம் நிறைவேறாமல் போயிற்று.

பாண்டவர், தங்கள் அரசாட்சி காலம் முடிந்து, கூட்டோடு சொர்க்கம் போகப் புறப்படுகிறார்கள். வடதிசையிற் சென்ற அவர்கள் சொர்க்கத்தை அலட்சியமாகக் கொண்டு ஒரே உறுதியாகச் செல்கிறார்கள். கொஞ்சதூரம் சென்றவுடன் பின்னால் சென்ற துரோபதை கீழே விழுந்து மரிக்கிறாள். இதை யறிந்த வீமன், "கூட்டோடு சொர்க்கம் செல்வதற்குள் இப்படி இடையில் வீழ்ந்து இறப்பதற்கு துரோபதை செய்த பாவமென்ன?" என்று தருமரைக் கேட்கிறான்.

அதற்கு தருமர் "திரௌபதி நம் ஐவரையும் விதிப்படி கணவர்களாக ஏற்றுக் கொண்டிருந்த போதிலும், அர்ச்சுனனிடத்தில் பிரத்தியேக அன்பை வைத்திருந்திருக்கிறாள்; அதுதான் அதற்குக் காரணம்" என்று சொல்கிறார்.

"முன்னவன் பகருவான் மொய்கு ழற்குஉளம்
பன்னுபற் குனன்மிசை அதிகம் பற்றுமால்,
அன்னபான் மையின் அவட்கு அடுத்ததாகும்; நீர்
துன்னுதிர் விரைந்தெனச் சொல்லி முந்தவே."

[பற்குனன் = அர்ச்சுனன்.]

உள்ளக்கிடக்கையை வெளியிடுங் கவியில் பொதுவாகப் பாண்டவர் ஐவரையும் 'பதிகள்' என்றும், அர்ச்சுனனை 'பெருங்கொழு

நன்' என்றும், தெய்வீகக் காதலை வெளியிட 'பேரிதயம்' என்றும், அப்படி அவள் செய்தது கற்புக்கு இழுக்கல்ல என்பதை விளக்க 'வசிட்டன் நல்லற மனைவியே அனையாள்' என்றும் சொற்களை வில்லிபுத்தூரார் உபயோகப்படுத்தி யிருக்கும் நயம் கவனிக்கத் தக்கது.

அப்படியானால்; ஷ கவியின் முதலடி.

"ஐம்புலன் களும்போல் ஐவரும் பதிகள்
ஆகவும், அவர்களில் ஒருவன்."

என்றிருத்தல் வேண்டும். அப்படி யல்லாமல், "இன்னம் வேறொருவன்" என்று வில்லிபுத்தூரார் பிரயோகித்திருப்பார் என்பது சந்தேகத்திற் கிடமாகவே இருக்கிறது.

ஏட்டுப்பிரதிகளை அச்சிற் கொணரும்போது பாட பேதங் களும், அச்சுப்பிழைகளும் நேர்வது சகஜம். பாடபேதங்களுக்கு ஓர் உதாரணம்: வில்லிபாரதம் பதின்மூன்றும் போர்ச்சருக்கம் 184-வது கவியின் மூன்றாவது அடி "மனைவியுயிர் வீய நன் மகன் மனைவி கையால்" என்று காண்கிறது. நல்லாப்பிள்ளை பாரதத் தில் அதே கவியின் அவ்வடி "மனைவியயலான் மருவல் கண்டு மவள் கையால்" என்றும் இருக்கிறது.

இனி, அச்சுப்பிழைக்கு உதாரணம்; வித்தியாரத்நாகர அச் சுக்கூடத்தில் 1925-ம் ஆண்டில் பதிப்பிக்கப்பெற்ற வில்லி பார தத்தில் விவாதத்திற் கிடமாய் நிற்கும் "ஐம்புலன்களும்,போல்" என்ற அதே கவியின் மூன்றாவ்தடியுடன் பிற்பகுதியைக் கண்டு தெளிக.

எனவே, மேற்படி கவியின் திரண்ட பொருள் என்ன என் பதைக் கவனிப்போம். அருந்ததியை நிகர்த்தவளான துரோ பதை கிருஷ்ணரைப் பார்த்துச் சொல்கிறாள்: "இறைவனே! ஐம் புலன்களைப்போல் ஐவரும் எனக்குப் பதிகளாக அமைந்திருந்தும், அப்பாண்டவர்களில் ஒருவனும், நான் ஆதியிலிருந்தே எனது கொழுநன் என்று தீர்மானித் திருந்தவனுமான அருச்சுனன் ஒருவனே எனக்கு காதற் கொழுநனாக அமைந்திருக்கக் கூடாதா என்று, கற்பிலக்கணத்தைக் கைக்கொண் டொழுகும் எனது இதயமே உருகுகிறது என்றால், சாதாரண பெண்களைப் பற்றி பேச என்ன இருக்கிறது! உலகத்திற் பெண்ணாகப் பிறந்தவர் எவர்க்கும் அவ்வித மனமொத்த ஆடவரிடத் திருந்தே காதலின் முழுநலமும் சித்திப்பதாகும். அப்படியல்லாமல், மனமொவ்வாக் கணவர்களிடத்தில் பதிபக்தி குறையாமல் அவர்கள் நடந்து கொண்ட போதிலும், காதல் என்ற அரும் பொருளை அவர்க ளிடத்தில், அப் பெண்கள் சரிவர அனுபவித்து மகிழ்கிறார்கள் என்று நம்புதற்கு இடமுண்டா? இதுதான் எனது உள்ளக் கிடக்கை" என்று கூறினாள் என்பதே எனது அபிப்பிராய மாகும்.

மூன்றாவதடியின் பிற்பகுதியை—ஆடவரில் ஆம் ஐ அன்றி— எனப் பிரித்துப் பொருள் கொள்ளலாம். இன் சாரியை.

# 'விளக்கெண்ணெயின் பெருமை

(மா. அ. தேவராஜன்.)



"விளக்கெண்ணெய் மாதிரி இருக்கிறதே!" என்பது ஒரு பழமொழி. இம்மொழி தொண்டை நன்னாட்டில் தான் இன்றும் வழக்கில் உள்ளது. வேண்டுமானால், ஒரு புது மொழியாகவும் வைத்துக் கொள்ளலாம். அதைப்பற்றிய வழக்கை அறிஞர்கட்கே விட்டு விடுவோம்.

"விளக்கெண்ணெய்" வழவழப்பில் பேர் போனது; ஆனால் குணத்திலோ பெயர் வாங்கியது; சேப்பங்கிழங்கும் வண்டைக்காயுமே ஒரு வாறு விளக்கெண்ணெய்க்கு ஈடாய் வழவழப் புடையன. இவ் வெண்ணெய்யில்—ஆம் வெண்ணெய்க்கும் சமம் தான்—என்னென்ன சத்துக்கள் எவ்வெவ்வளவு இருக்கின்றன? என்று ஆராய எனக்குத் திறமில்லை. அண்மையில் உள்ள உங்கள் மருத்துவரைக் கேட்டு முதலில் தெரிந்து கொண்டால், "விளக்கெண்ணெயின் பெருமை" என்ற தலைப்பில் நான் எழுதப் புகுவதை ஏளனம் செய்ய மாட்டீர்கள்.

பிறரைப்போல் நானும் என் பிள்ளைப் பருவத்தில் விளக்கெண்ணெயை விஷ எண்ணெயாய் எண்ணியதும் உண்டு. ஆனால் அதன் பெருமை துய்த்துப் பார்த்தால் தானே தெரிகிறது! யாரேனும் ஒருவர் நடுநிலைமையுடன் ஒரு வழக்கினைத் தீர்த்து வைத்தால், உடனே, அவரை "விளக்கெண்ணெய் வாதி" என்று கூறி உலகம் எள்ளி நகையாடுகிறது. ஆனால் உலகம் உண்மையைத்தான் உரைக்கின்றது!

நான் மருத்துவன் அல்ல; மருந்தின் கூறும் அறியேன், ஆனால், வீட்டிலே விளக்கெண்ணெயின் பெருமை, மணம், குணம், நிறம் ஆதிய பண்புகளை நாடொறும் அறிந்து வருகின்றேன். நான் அண்மையில் கூடப் பெரிய வயிற்று வலியால் வருந்தினேன். அதனைப் போக்க மருத்துவனை நாடவில்லை. எனக்கு என் சிறிய வயதில் என்னருமை தாயார் அறிவித்த கைகண்ட மருந்து அத் துன்பவலி நீங்க அதே விளக்கெண்ணெய்தான்! "மலச்சிக்கல் துன்பம்" துய்த்தறிந்தவருக்கு 'விளக்கெண்ணெய் எப்படிப் பயன் படுகிறது?' என்பது நன்கு தெரியும். பச்சிளங் குழவிகளைப் பண்படுத்த இந்த விளக்கு எண்ணெய் எப்படி உதவுகிறது என்பதை நம்மைவிட நன்கு தாய்மார்கள் அறிவார்கள்: நேர்வாள மாத்திரை—அதுதான் எமலோக யாத்திரைக்குதவும் "நீர்வளம்"-யைவிட, விளக்கெண்ணெயில் எலுமிச்சம்பழச் சாறும் ஒலியும் கலந்துண்டால் ஆயாசமின்றி எளிதாகப் பேதியாகுமாம். பித்தம் நீங்குமாம். இன்னும் எத்தனையோ நன்மைகளைக் கூறி

விளக்கெண்ணெய்க்குள்ள பெருமையை விளக்கலாம். ஆம். எனக்கொரு சந்தேகம். நேரில் உள்ளதைப் பார்க்கத் தவறுங்கால் நம்மை நம் தோழர்கள் "கண்ணில் விளக்கெண்ணெய் விட்டுப் பார்" என்று நையாண்டி செய்கின்றனர். ஒருகால், குருட்டினை நீக்கவும் இவ் வெண்ணெய் உதவுமோ என்னவோ ?

விளக்கு எண்ணெய்! ஆம்! விளக்குகளுக்கே உரிய எண்ணெயாக ஒரு காலத்தில் பயன்பட்ட எண்ணெய் தான்! அந்தக் குளிர்ந்த—ஒளி மிகுந்த—பசிய வெளிச்சத்தில் கற்றுயர்ந்த நம் மூதாதையரும் பிறரும் ஆண்டு பல ஆகியும் நரை திரையிலராய் ஒளியுடன் கூர்ந்து நோக்கும் ஆற்றலும் பெற்று இருந்தனர்! ஆனால் இன்று ?

அறிஞர். திரு. வி. க. அவர்கள் அறுபதாம் ஆண்டு நிறைவு விழாக் குறித்தெழுத வந்த விடத்து விளக்கெண்ணெயின் பெருமையைச் சற்று விளக்கமாகவே விளம்ப நேர்ந்தமைக்குப் பொறுத்துக் கொள்ளுங்கள். இனி இதனை இயம்பிய ஏதினையும் எடுத்துரைக்கிறேன்!

என் நினைவு சரியானதாய் இருந்தால் அன்று ஞாயிற்றுக் கிழமைதான்! வட ஆர்க்காட்டில் வேலூர் சைவ சித்தாந்த சமாஜத்தின் 14-வது (சரியாக நினைவில்லை) ஆண்டு விழாவில் அருள் திரு. திருப்பாதிரிப்புலியூர் ஞானியார் தலைமையில் அறிஞர் திரு. வி. க. அவர்கள் "சந்தேகம்" என்ற தலைப்பில் ஆற்றிய ஓரரிய சொற்பொழிவு கேட்டு விட்டு, (ஆம்; ஏனைய நண்பர்கள் அவ் விரிவுரையின் முடிவினை அங்கேயே விட்டு விட்டனர்) எம் ஊர் நோக்கி வருகிறோம். பல புலவர்கள் நிரம்பிய ஒரு சிறு கூட்டத்தில் பிற அறிஞர்களைப்பற்றிய வேதாந்த 'அக்கப்போர்' கிளம்பின. அங்குத் தான் நான் முதலில் "திரு. விளக்கெண்ணெய் கலியாணசுந்தர முதலியார்" என்ற தொடரைக் கேட்டதாக என் நினைவு. அதன் பின் என் இயற்றமிழ் ஆசிரியர் உட்படப் பலரிடமும் திரு. வி. க. வுக்கு "விளக்கெண்ணெய்ப் பட்டம்" கட்டப் பெற்றிருப்பதைக் கேட்டுளேன். அது முதல் திரு. வி. க. வின் வெளியீடுகளாகிய "நவசக்தி", "பெண்ணின் பெருமை", "காந்தி யடிகளும் மனித வாழ்க்கையும்", "முருகன்", "உள் ஒளி", "தமிழ்த் தென்றல்", "இளமை விருந்து" முதலிய பல அரிய நூல்களைக் கற்றபின் "அவருக்கு அப் பெயர் முற்றும் தகும்" என்ற முடிவுக்கே நானும் வந்தேன். ஆனால் பிறர் வந்த முடிவுக்கும் என் முடிவுக்கும் நேர்மாறான முரண்பாடுண்டு. "வித்துவக் காய்ச்சலால்" ஏனைய, "வெளி உலகம் அறியாக் கிணற்றுத்தவளைக் கவிராயர்கள்" அவர்க் கேற்பட்டுள்ள பெருமைக்கு இழிவுண்டாக்கவே அப்படிக் கூறி வந்தனர். அதற்கு அவர்கள் கூறும் காரணம் ஒன்றே ஒன்றுதான்; அஃதாவது: "திரு வி. க.வின் எழுத்தோவியங்கள் யாவும் வழவழப் புடையன. இப்படியும் அப்படியும் மழுப்பப் பெற்றுள்ளன; அவர் ஒரு வழவழாப் பேர் வழி......" என்பது. ஆனால் உண்மை வேறு. பெருந் தன்மையுடன் நடுநின்று நவில்வளவே அப்படித் தோன்றுகின்றன. ஆனால் நான் கூறுங் காரணங்களோ பல.

"விளக்கெண்ணெய் வாதி" நடுநிலைமை யுடையவன் என்றுலகம் இயம்புகிற தல்லவா? ஆம்; திரு. வி. க.வும் நடுநிலைமை உள்ளவர் தாம். "காய்தல், உவத்தல் அக்றறி ஒரு பொருளை ஆயும் அறிவு" சான்ற ஆன்ற குடிப் பிறந்தோர்க்கிருக்க வேண்டிய "நடுவு நிலைமை"யின் சிறப்பினைத் திருக்குறளில் கண்டு கொள்க. முன் விளக்கெண்ணெய், வழ வழப்பாயினும் பயனில் பெயர் வாங்கியது என்றே னல்லவா? அதுபோலவே, திரு. வி. க. வின் செயல்கள் யாவும் வெளித்தோற்றத்தில் வழவழப்பாய்த் தோன்றுகின்றன. ஆனால் பயனிலோ, பிற தலைவர்கள் செய்ய முடியாத அரிய பெரிய காரியங்களை நிறைவேற்றி யுள்ளனர். விளக்கெண்ணெய், தன் பெருமையைப் பறையடிப்பதில்லை. அதுபோல் திரு வி. கவும். திருக்குறளிலே பெருமையின் அதிகாரத்தைப் புரட்டுங்கள். என்ன கூறுகிறது? "அடங்குமாம் என்றும் பெருமை ......பெருமை பெருமித மின்மை!........."விளக்கெண்ணெய் தன் பணியில் சிறிதும் பிசகுவதில்லை. திரு வி. கவும் **"என் கடன் பணி செய்து கிடப்பதே!"** என்ற கொள்கையுடன் அடங்கியுளார்.

விளக்கெண்ணெய் நோயாளியின் **வயிற்றுவலியைப்** போக்குகிறது; **கல்லீரலையும்** இளக்கிக் **கட்டுப்பட்ட மலத்தை** வெளியேற்றி **(உடற் சம நிலை) ஒழுங்கினை** யளித்து **இன்ப வாழ்வு** ஈகின்றது. பசிளங் குழவிகட் கேற்படும் **மந்தம், கபம்,** முதலியவற்றைப் போக்கி உடலைக் **கட்டெழிலாய்** வளர்த்துப் பயனுறுத்துகிறது!

திரு. வி. க. வும் தொழிலாளிகளின் **வயிற்றுவலி** [பசி]யைப் போக்கிச் **சமநிலைப்** படுத்துகிறார்; **கல்ஒத்த நெஞ்சினரான வஞ்சகரையும்** தன் இனிய அன்பு கலந்த தொண்டினால் **இரக்க** முடையராக்கி, கர வாடும் வன்னெஞ்சர்கள் **கட்டுண்ட ஆணவ முதலிய மலங்களை அவர்கள் உள்ளத்தின் நின்றும்** வெளியேற்றி **இயற்கை ஒழுங்கினை** இனி தறிவித்து **இறையின்பத்தின் இன்ப வாழ்வு** ஈகின்றார்; இளைஞர்கட்கு இயல்பாகவோ, செயல்பாகவோ, ஏற்படும், **சோம்பல், தீக்குணக் கொள்கை, உடல் மெலிவு, அறியாமை** முதலியவற்றைப் போக்கி, **நல்னிலை** யுற **நல்** வழி காட்டி **நன்னெறி** பற்றுமாறு நலம் புரிகின்றார்! அம்மட்டோ!

நாங்கள் கட்டில்லாக் காளைபோல் திரியுங்கால், **"சடு குடு"** **என்றொரு விளையாட்டு** ஆடுவோம். அதில் எவனாவதொருவன் எவர் பிடிக்கும் அகப்படாமல் தப்பிச் சென்றும், மண் பூசிய கையுடன் பிடிப்பவனிட மட்டும் அகப்பட்டும் நிற்பானாயின் அவனை **"விளக்கெண்ணெய்!"** என்று அழைப்போம். அப்படியே, திரு வி. க. வும் **உலக விளையாட்டில்** எவர்க்கும் அடங்காமல் விலகி வீறுடன் செல்லும் ஏறுவாய், **அன்பினால் பிடிப்பவர் அகக்கண்ணியில் பிடிபடுகின்றார். எனவே, திரு வி. க. "விளக்கெண்ணெய்" தாமே?**

விளக்கெண்ணெய், குருட்டைப் போக்கலாம் என்று ஐயுற்றுக் கூறினேன் அல்லவா? அந்த ஐயத்தைத் திரு வி. க. வாழ் வாறு நீக்குகிறது. நம் தமிழகத்தில் **கண்களாகிய எண்ணும் எழுத்தும் திறக்கப்பெறாத குருடர்களுக்கும், கற்றுணர்ந்தும் வெளிநாடும், மெய் அறிவும்**

(உடலறிவும் கூட) பெருத கண்ணுள்ள மாலைக்கண்ணர்களுக்கும், தம் மித ழாசிரியத் தொண்டாலும்—நூல் வெயீட்டாலும் கண்ணைத் திறந்து கண்ணேயிலையும் போக்கி யுள்ளார்! எனின் திரு வி. க.வை விளக்கெண் ணெய் என்று ஒரு சிலர் உரைப்பது எவ்வளவு உண்மையா யுள் ளது, பாருங்கள்!

விளக்குக்கு எண்ணெய் அல்லவா விளக்கெண்ணெய்? இதோ, தொழி லாளர் ஏற்றிய "தொழிலாள ரியக்கம்" என்ற விளக்கும், "தமிழகப் பேரொளி" விளக்கும், "பெண்ணினவுரிமை" விளக்கும், "இளைஞர்கள் சிறு சுடர்" விளக்கரும், "இந்திய விடுதலை" என்ற அகண்ட கார்த்திகை விளக் கரும் நம் அறுபதாண்டுக் கிழ இளைஞரின் தோண்டாம் எண்ணெயினையே மாந்தி ஒளி வீசுகின்றன, பாருங்கள்! ஒளிபெற விளக்கு ஒரு கருவி, எண்ணெய் தான் மூலம்; அதேபோல், மேற்படி இயக்கங் கள் எல்லாம் நாம் நலமுற உதவும் துணைக் கருவிகள். திரு. வி. க. தாம் மூலம்! இப்போது "விளக்கெண்ணெயின் பெருமை" விளக்கம் ஆக என் நிலைவும் அதற்கு மூலமாகிற தல்லவா? எனவே அன்பர்களே, விளக் கெண்ணெய் மூலத்தைப் போற்றுங்கள். உங்கள் விளக்கங்களைத் தெருக்கள் தோறும் இல்லங்கள் தோறும் ஏற்றுங்கள்!

இனி அறுபதாவ தியாண்டு விழாவைப் பற்றிச் சில கூறு வோம். பலவேறு நாடுகளிலும் பிறப்புவிழாக் கொண்டாடும் வழக்கம் உண்டு. ஆனால் முறையில் வேறுபாடுண்டு. மேனாடு களில் சிறப்பாக முதலாண்டு விழா, வெள்ளி விழா (25ம் ஆண்டு விழா), பொன்விழா (50ம் ஆண்டு விழா), வைரவிழா (60ம் ஆண்டு விழா)க்கள் சிறப்புறும் நூற்றாண்டு விழா எங்கும் சிறப்புறு கிறது. நம் நாட்டிலோ, முதல் ஆண்டுடன் வைரமணி விழாவாகிய "சஷ்டி யப்த பூர்த்தி"யே மிகச் சிறப்புறுகிறது. நூற்றாண்டு விழா சிறு பான் மையதே. அறுபதாம் ஆண்டுக்குள்ள சிறப்பையும் அவ்வாண் டின் இறுதியில் ஒவ்வொருவரும் திருமணம் இயற்றித் திருமாங் கலியம் புதிதாய் முதலுடன் கோத்தணிவதும் பிறவும் நோக்கினல் ஓர் உண்மை புலப்படுகிறது.

என்ன? "மனிதர்க்கு வயது நூறல்லது இல்லை" என்றார் கபிலர்; இதனை ஓர் ஆழ்வாரும் வலியுறுத்தியுளார். ஆனல் நடைமுறை யில் நூற்றுயிரத்தொருவரே அவ்விதம் நூறாண்டும் வாழ்கின்ற னர். அவர்கள், தமிழ் அறிஞர். மறைமலை யடிகளைப் பின்பற் றியவர் போலும்! போக. நம் முன்னோர்கள் நாவில் ஒரு மனிதனின் சராசரி வயது அறுபது என்றுதான் இவ்வழக்கம் சுட்டுகிறது. "இரண்டாம் பிறப்பின் தொடக்கம்" என்றும் கூறலாம். ஆனல் இந்நாளிலோ, நம் தமிழ னின் சராசரி வயது 23 அல்லது 25 தான்! மேல் நாட்டாரின் சராசரி வயது 45க்கு மேல் போகிறது! இதனல் நாம் நம் ஒழுக் கங்களை மிகவும் கையாளாமல் நமக்கு ஒவ்வாத, மேனாட்டார் ஒழுக்கங் களைக் கையாடி இளமையில் இறப்பை எதிர்நோக்குகிறோம் என்பது பெறப் படுகிறது.

இறுதியாக ஒன்று. புலவரைப் போற்றாத நாடு எந்தக் காலத்திலும் முன்னேறியது கிடையாது. புலவர்கள் அமரத்துவம் பெற்றவர்கள்; ஊழி இறுதிவரை உற்றுணரும் தன்மையர்; வாழ்வின் செம்மைக்கு வழி காட்டிகள். இப்புலவரைப் போற்றியே நம் முன்னோர்கள் மிகச் சிறந்த ஆட்சி நிறுவினர். இன்றும், மேல்நாட்டில் ஷேக்ஸ்பியர் வாழ்ந்த குடிசைகளுக்கு அளித்து வரும் பெருமதிப்பும், உலக மாக்கவி (Laurate) என்ற பட்டம் சூட்டி மதிப்பதும், நோபிள் (Nobel) பரிசில் வழங்கி ஊக்குவதும், சமஸ்தானத்தில் இடந்தந்து ஆதரிப்பதும், புலவர்க்கு மேல் நாட்டினர் செய்யும் சிறப்பை வலியுறுத்தும். எனவே, நல் வாழ்வு வேண்டும் நாம் புலவர்களைப் போற்றுவோம். அன்றியும் தொண்டர்தம் பெருமை சொல்லவும் அரிதாகலினாலும், தலைவரைப் போற்றுதல் தகுதியாதலினாலும் வேறுபாடு கருதாது யாவரும் கூடிப் புலவர் திரு. வி. க. வைப் போற்றுவோம். வாருங்கள்!

மேனாட்டார் மோகத்தில் விழுந்தலையும் நண்பர்க்கு ஒரு வார்த்தை. நம் நாட்டு வழக்கத்தைக் கையாளும் அறிஞர் திரு வி. க. போன்ற தேச பக்தர்களும் தமிழன்பர்களும் பெரிதும் நீண்ட நாட்கள் வாழ்வ துணர்ந்தேனும் நாட்டுப்பற்றும் மொழிப் பற்றும் கொண்டு நல்ல ஆயுளைப் பெறுக!

திரு. வி. க. உலக அரங்கில் ஒவ்வொன்றாய் அறுபது படிகள் ஏறி அரிய நாடகம் ஆடி ஓய்ந்துள்ளனர்! ஒவ்வொரு படியிலும் அவர் ஆடிய நாடகங்களை எழுதின் ஏடு கொள்ளாது. திரு. வி. க.வின் நூல்கள் அனைத்திலும் இராமலிங்க அடிகளின்-தாயும் ஆனவரின்-திருவுள்ளங்கள் ததும்பி வழிகின்றன. நாட்டு, மொழிப்பற்று விழுமியதாகப் போற்றப்படுகின்றன. எனவே அவற்றிற்கு எடுத்துக்காட்டுக்கள் நிறைய திருச்சியும் தஞ்சையும் ஒன்றி 1932-ல் கூட்டிய மாணக்கர் மாநாட்டுச் சொற்பொழிவாகிய "சீர் திருத்தந்தை" ஒவ்வொரு தமிழனும் ஒரு முறையேனும் கற்றுணர்ந்து, உய்தி பெறுவானாக

# ரஷ்யரும்-பழந்தமிழரும்

(வியஸ்ஸார்.)



தற்காலத்தில் ரஷ்யரின் வீரத்தையும், சுதந்திர வுணர்ச்சியையும் பற்றி நாம் கேட்டு வியப்புறுகின்றோம். எத்தனை விவசாயப் பண்ணைகள் அழிந்தன. ஆயிரக்கணக்கான எண்ணெய்க் கிடங்குகள் நாசமாயின. லக்ஷக்கணக்கான வீரர்கள் மாண்டனர். இன்னும் பல வகையிலும் அளவற்ற நஷ்டம். ஆயினும் என்ன? ரஷ்யர் மனந் தளரவில்லை. உண்மையில் இது அதிசயமே!

இத்தகைய தளரா வீர சுதந்திர வுணர்ச்சி தற்போதைய தமிழர்களிடையே மாசுற்றதெனினும் நம் பழந்தமிழர்கள் இதில் திகழ்ந்து விளங்கினர். சுதந்திரத்திற்காக நம் தமிழர் எதையும் இழக்கத் தயாரா யிருந்தனர்.

பாண்டியன் நன்மாறன் சோழநாட்டின்மேல் படையெடுத்தான். ஜெர்மானியர்கள் பல பிரதேசங்களையும் கடந்து "ஸ்டாலின் கிராடில்" முற்றுகையிட் டிருந்ததுபோல், பாண்டியன் காவிரிப்பூம்பட்டினத்தை முற்றுகையிட்டான். அதுவரையிலும் பாண்டியன் சோழதேசத்து வீரர்களை முறியடித்து வெற்றியுடன் முற்றுகையிட் டிருக்கிறான். மதுரையினின்றும் புறப்பட்ட பாண்டிய வீரர்கள், சோழநாட்டின் கதிர் வளரும் வயல்களை நாசமாக்கி விட்டனர். தன் வழியே தென்பட்ட ஒவ்வொரு ஊரையும் இக் கிரையாக்கி விட்டனர். இறுதியில் காவிரிப்பூம் பட்டினத்து முற்றுகையிலும் வெற்றிபெறும் சந்தர்ப்பத்தில் இருந்தனர்.

அக்காலங்கள் சில நியதிகளுக் குட்பட்டே அரசர்கள் போர் செய்தனர். எந்த தேசத்துப் புலவர்களாயினும் அவர்கள் மட்டும் எங்கும் செல்லலாம். காவிரிப்பூம்பட்டினத்திலே யிருந்த காரிக்கண்ணனார் என்ற புலவர் பாண்டியன் நன்மாறனைச் சந்திக்க வந்தார். சோழநாட்டைச் சேர்ந்த அவர் எவ்வாறு சோழன் தோற்றுவரும் அவமானத்தைத் தாங்க முடியும்? தன்னாடு சுதந்திர மிழக்க அவர் விரும்புவாரா? நன்மாறனைக் கண்டு அவனுக் குச் சரியான புத்தி கற்பிக்க வேண்டுமென்றே தான் வந்தார்.

நன் மாறனைக் கண்டார். "சண்டையைத் தயவு செய்து நிறுத்த மாட்டாயா?" என்று அவர் அவனை இறைஞ்சவில்லை. "எங்கள் சோழநாட்டின் வளப்ப மிகுந்த வயல்களை நீ அழிக்கின்றதனால் என் மனங் கலங்கவில்லை. இன்னும் வேண்டுமாயினும் அழி. எங்கள் மாடமாளிகை கூட கோபுரம் நிறைந்த ஊர்களை உன் வீரர்கள் நெருப்புக் கிரையாக்கினாலும் என்ன ஆய்விடும்? கணக்கற்ற படைவீரர்களை வேண்டுமானால் கொல்லட்டும்," எனும் முறையில்,

"நீயே, பிறர்நாடு கொள்ளுங்காலை யவர்நாட்டு
இரங்குகதிர்க் கழனிநின் இளையருங் கவர்க
நனந்தலைப் பேரூர் எரியு நக்க
மின்னு நிமிர்ந்தன்னநின் ஒளிறிலங்கு நெடுவேல்
ஒன்னார்ச் செகுப்பினும் செகுக்க......"

என்று பாடினார். பாடிக் கொண்டிருக்கும்போதே அவர் சட்டென ஒரு நிமிடம் நிறுத்தி விட்டார். பின்னால் தான் பாடப்போகும் அடிகளை அவர் எண்ணும்போது அவரின் உள்ளம் உடைந்து விடும்போல் கண்டார். அவர் தொண்டையே விக்கியது. ஏன்? இவ்வளவு கொடுமைகளுக்கும் நாச வேலைக்கும் சந்தோஷத்துடன் அனுமதித்து அஞ்சா நெஞ்சம் படைத்த அவர் இவற்றின் இறுதியிலே தன் சுதந்திரம் போய்விடுமோ!" என்றபோது அவர் உள்ளம் உடையாமல் என்ன செய்யும்! "நெல்வயல்களையும், பேரூர்களையும், வீரர்களையும் அழித்ததுபோல் தன் சுதந்திரத்தையும் அழித்து விடுவானோ" என்று அவர் மனம் குன்றியது. ஆகவே, அவர் நன்மாறனை வேண்டுகிறார்.

"—என்னதூஉங்
கடிமரம் தடிதலோம்பு நின்
நெடுநல் யானைக் கந்தாற்றாவே."

என்று பாடி முடிக்கின்றார். "அவற்றை யெல்லாம் நீ அழித்து விட்டபோதிலும், சுதந்திரத்தின் சின்னமாக விளங்கும் கொடி மரம் கட்டப்பட்டிருக்கும் காவல் மரத்தை மட்டும் நீ சிதைத்து விடாதே. அது உன் வலிமிகுந்த யானைகளின் பலத்திற்கு முன் எம்மாத்திரம்!" என்று பாடி முடிக்கின்றார்.

சுதந்திரத்தின்மேல் புலவர் எவ்வளவு அன்பு செலுத்துகிறார் பாருங்கள். எதையும் இழக்கச் சம்மதிக்கிறார். ஆனால் தன் சுதந்திரத்தை இழக்க மட்டும் அவர் சம்மதிக்கவில்லை. பழந்தமிழரின் மனப்பான்மை, இந்தப் புறநானூற்றுப் பாட்டிலிருந்து நன்கு விளங்கும். ரஷ்யரின் மனவுறுதியும் இத் தன்மையதே.

[இரங்கு கதிர்க்கழனி—காய்ந்து முதிர்ந்து ஒலிக்கின்ற நெற்கதிர்கள் நிறைந்த வயல்கள்; இளையர்—வீரர்கள்; நனந்தலைப் பேரூர்-அகன்ற பெரிய பட்டணங்கள்; எரியுநக்க — தீ தழுவி எரிக்கட்டும். ஒன்னார்—பகைவர்; என்னதூஉம்—ஆயினும்; கடிமரம்—கொடி பறக்க விட்டிருக்கும் காவல்மரம்; கடிதலோம்பு—வெட்டி விடாதே; கந்து-பலம்.]

# வார்தா நினைவுகள்

("சமூகத்தொண்டன்.")



## எல்லோரும் ஓர் குலம்

பயிற்சிக்கு வந்திருந்தோரில் பல மாகாணத்தாரும், பல மொழி பேசுவோரும், பல சமயக் கொள்கை யுடையோரும் இருந்தனர். இருந்தும் "........செப்பு மொழி பதினெட்டுடையாள் எனில் சிந்தனை யொன்றுடையாள்" என்றவாறு எல்லோரும் பாரதத்தார் என்ற ஒரே எண்ணத்துடன் தானிருந்தனர். ஆனால், மொழித்தொல்லை ஒழிந்தபாடில்லை. சாப்பிடுங் கூடத்தில் ஒவ்வொரு மொழி பேசுவோரும் ஒரு குறிப்பிட்ட விடத்தைப் பிடித்துக் கொண்டு, அங்கே அம்மொழி பேசுவோ ரனைவரும் அமர்ந்து, தம் மொழியாளருடன் குலவிக் குலவி உண்ணுங் காட்சி காணத் தக்கதாய்த்தா னிருந்தது. ஆனால், இந்து, இஸ்லாமிய, கிருஸ்தவன் என்ற வேற்றுமை தலைக் காட்டுவதேயில்லை. எல்லைப்புறத்து இஸ்லாமியர்களிடம் எல்லோருக்குமே ஒரு தனி வாஞ்சை. அவ்வாறே சென்னை மாகாணக் கிருஸ்தவரிடத்திலும் மதிப்பு காட்டினர். திருவிதாங்கூரைச் சேர்ந்த திரு. குரியன் அவர்களுடன், எங்களில் பலர் மாதா கோவிலுக்கும் சென்று தொழுகையில் கலந்து கொள்வது வழக்கம். இவைகளிலெல்லாம் இருந்து நாம் பெறும் படிப்பினை யாதெனில், கல்வி வளர்ச்சியும், நாட்டுப் பற்றும் பெருகப் பெருக சில்லரைச் சச்சரவுகள் அனைத்தும் தாமே மறைந்து பழங்கதையாகு மென்பது தான். எனவே, மக்களிடையில் பொதுக் கல்வி பெருக்க வேண்டியதே தலைவர் கடமை யாகும். இச்சமயம் நான் இன்னொரு நல்ல கருத்தை வெளியிடத் தவறக்கூடாது.

## எளிய வாழ்க்கையும் உயர்ந்த லட்சியமும்

குமாரி விட்டோ (Miss Viddow) என்பவர் கனடாதேசத்து மங்கை. அவர் பிரமஞான சங்கத்தைச் சேர்ந்தவர். அ. இ. கி. கை. சங்கத்தின் நூல் நிலையத்தில் தொண்டாற்றி வந்தார். அவர் கிரம்பப் படித்தவர். 40-வயதுடையவர். இவர், தம் போகவாழ்வைத் "தூ" வென்று தள்ளி இந்தியக் கலை ஞானத்தில் பற்றுடையராய் இந்தியா வந்திருப்பவர். நூல் நிலையத்தை அழகாக வகுத்து வைத்திருந்தார். சாப்பாட்டு நேரத்தில்தான் எங்களுடன் இருப்பார். அவர் பெரும்பாலும் கதர் சேலைதான் உடுத்துவார். ஒவ்வொருநாளும் மணையில் உட்கார்ந்து உண்பதும், உண்ணும் தட்டை துப்புரவு செய்வதும் பெருந் தொல்லையா யிருந்தது அவருக்கு. அவர் படும் தொல்லைக்கே அவர் பால் எனக்கு அனுதாபம். நான், "தாயே, எங்கள் வாழ்க்கை முறை மேல் நாட்

ட்ராகிய தங்களுக்குப் பெருந் தொல்லையாக விருக்குமே" என்றேன் ஒருநாள். "ஆம், மகத்தான இலட்சியத்தை யடைய விழைவோர் தொல்லை யடைந்தே யாகவேண்டும். நம் வாழ்க்கை தொந்தரையா யிருந்தாலும் உயர்ந்த லட்சியமுடைய எளிய வாழ்க்கை யன்றோ இது?" என்றார்.

எங்கள் வித்தியாலய உணவு விடுதியில் எங்களுடன் பல ஐரோப்பிய விருந்தினரும் வந்து உணவு கொள்வது உண்டு.

சாப்பிட்டு முடிந்ததும் எல்லோரும் தத்தம் தட்டுகளுடன் போய்த் துப்புரவு செய்து கொள்வோம். இப்போது மணி 12 இருக்கும். ஒரு மணி நேரம் ஓய்வு கொண்டபின் சரியாய் 1 மணிக்கு இராட்டை வகுப்பிற்குச் செல்லவேண்டும். இவ் வகுப்பில் 40 நிமிஷங்கள் செல்லும். மகன்வாடியில் இந்த நாற்பது நிமிஷக் கட்டாய நூற்றல் எல்லோராலும் செய்யப்படவேண்டும். இந்த நேரத்தில் திரு. ஜே. சி. குமரப்பா முதல் எல்லாச் சிப்பந்திகளும் வித்தியாலயத் தொழுகைக் கூடத்தில் அமர்ந்து நூற்பர். இந்த நூற்றலை சாதாரண இராட்டை நூற்றலோடு ஒப்பிடாமல், அதற்கு "தியாக வேள்வி" என்று ஓர் மகத்தான தத்துவம் கற்பிக்கப்படுகிறது. எனவே, இவ் வேளையில் நூற்றலில் கலந்து கொள்ள எந்த சிப்பந்தியும் முன் கூட்டியே உத்திரவு பெறவேண்டும். இல்லையேல் தண்டனையும் உண்டு. ஆகவே திரு. சீதாதேவி போன்றோரும் இந்தப் புனித வேள்வியை யாற்ற, அந்த எரிக்கும் வெய்யிலில், தாமே இராட்டையைச் சுமந்துகொண்டு பிரார்த்தனை கூடம் நோக்கி நடக்கும் காட்சி ஒருபுறம் மனத்தை யுருக்கும். மற்றொருபுறம், நமது வாய் சுதந்தரம் அடைந்தே தீருவோம் என்னும் உற்சாக மிக்க சூளுரையை ஆர்ப்பரிக்கச் செய்கிறது.

பிற்பகல் 1-45 மணிக்கு இராட்டை வகுப்பிலிருந்து திரும்பியதும் தொழிற்சாலை மணி எல்லோரையும் கூவி யழைக்கின்றது. இரண்டு மணிக்கு வேலை மேற்சென்று மாலை 5 மணிக்கு வித்தியாலயம் திரும்பிவிட வேண்டும். பிறகு, இரவு சாப்பாடு. வார்தா வட்டாரங்களில் இரவு உணவு மாலை 5½ மணிக்கே முடிந்து விடும். பின்னர், இரவு 7-30 வரையில் எவருக்கும் குறிப்பாய் எவ்வித வேலையுமில்லை யாகவே எல்லோரும் தத்தம் மனதிற்கிசைந்தவாறு நடப்பர். சிலர் உலவச் செல்வர். வேறு சிலர் செய்தித்தாள் படிக்கச் செல்வர். மற்றும் சிலர், திரு. ஜம்னலால் பஜாஜ் அவர்களால் ஹரிஜனங்களுக்குத் திறந்து விடப்பட்டுள்ள இலட்சுமி நாராயணர் கோயிலுக்குச் செல்வர். அங்கு உயர்தரமான பஜனை நாள்தோறும் நடைபெறுமாதலால், செவிக்கு உணவான இசைச் செல்வத்தைத் தேடுதல் இயல் பன்றோ?

இரவு 7½-க்கு மறுபடியும் பிரார்த்தனை. அதற்குப்பின் அவரவர்கள் அறைகளில் இருந்து ஏதாவது செய்தல். பெரும்பாலும் இராட்டையில் நூற்றுக்கொண்டே பொது விஷயங்களைப்பற்றிப் பேசுதல் ஆகியவை. இரவு 9 மணிக்குமேல் கட்டாயமாய்ப் படுத்துக் கொள்ளவேண்டும்.

படம் பார்க்க விரும்புவோர் வித்தியாலய அதிபரிடம் தெரிவித்துக்கொண்டு போகலாம்.

மகன்வாடி சங்கம் மேலே விளக்கியபடி அவரவர்கள் விருப்பத்திற்கொத்த தொழிலில் பயிற்சி யளிப்பதோடு அவசியமான சில பாடங்களையும் பயிற்றுகிறது. அவைகளில் முக்கியமானவை காந்தி தத்துவம், சுகாதாரம், கணக்குப் பதிவு (Book keeping) ஆகிய இவையே. இப் பயிற்சி இலகுவாயிருக்க வித்தியாலயத்தில் உள்ளோரை ஆங்கிலப் பிரிவென்றும், இந்திப் பிரிவென்றும் இரு பிரிவுகளாக்கிப் போதிக்கின்றனர்.

இவ்வாறு பத்து திங்களையும் மகன்வாடியில் பயனுறச் செய்து, நடத்தும் தேர்வில் எழுதி, நற்சாட்சிப்பத்திரம் பெற்றுத் தத்தம் ஊர் திரும்புகின்றனர். இந்தப் பத்திரம் வழங்குவதும், மற்றப் பல்கலைக் கழகங்களில் நிகழ்வது போன்ற பட்டமளிப்புப் பிரசங்கத்தோடுதான். எங்களுக்குப் பட்டமளிப்பு சொற்பொழிவு ஆற்றியவர் தமிழகத்துத் தலைவர் திரு. ராஜகோபாலாச்சாரியார் அவர்களாவர்.

மகன்வாடியில் நற்சாட்சிப் பத்திரம் வழங்குவது, மற்றப் பள்ளிகளைப் போன்று அந்தந்தப் பாடங்களுக்கான வீதாச்சார "மார்க்கு"களைக் கூட்டி யன்று. ஆனால், அவரவருடைய குணம், நல்லெண்ணம், நூல் நூற்றல், இறை வணக்கத்தின் போது ஒழுகும் முறை, உடற் பயிற்சிக்கான நேரத்தில் நடந்து கொள்ளும் தோரணை, அஹிம்சை யாகியவற்றைப் பற்றிய கொள்கை ஆக இவற்றைக் கொண்டே ஒவ்வொருவருடைய நற்சாட்சிப் பத்திரங்களும் இருக்கும். வித்தியாலய அதிபர்—Warden—ஒவ்வொருவருடைய நிழல்போலிருந்து அவரவருடைய இயல்புகளைக் குறித்து வருகிறார். இக்குறிப்பைக் கொண்டுதான் ஒவ்வொருவருடைய நற்சாட்சிப் பத்திரத்தின் உயர்தாழ்வு நிச்சயிக்கப் படுகிறது.

யான் இதுகாறும் மகன்வாடி வித்தியாலயத்தைப் பற்றிக் கூறி வந்ததிலிருந்து, அது வெறும் தொழில் பயிற்றும் தொழிற் சாலையாக மாத்திர மல்லாமல், உயர்தர மக்களைப் படைத்து நாட்டுக்கு வழங்கும் ஓர் சிறந்த கலைதெரி கழகமாயும் இருப்பதை வாசகர்கள் உணரத் தவற மாட்டார்கள். மகன்வாடி மனிதனை அறிஞனாக்குகின்றது; தேசபக்தனாக்குகின்றது; வீரனாக்குகின்றது; ஒப்பிலாத் தியாகியாக்குகின்றது; தாய் நாட்டைக் காக்கும் காவலனாக்குகின்றது. எனவே, அது போன்ற கழகங்கள் நாடெங்கும் காண வேண்டும். அது போன்ற கழகம் தமிழகத்தில் இருப்பதாய்ப் பலருக்குத் தெரிய வராது. ஆனால், இருப்பது என்னவோ உண்மை.

(தொடரும்).

---

# ஜ்யோதிஷ பல ரகஸ்யம்

(சி. பி. ஆனந்தம்.)



## 17 சனி உலகின் பலங்கள்

சனிக்கிரகத்தின் இயல்களும்—காரகங்களும் இது முன் கண்டோம். அது ஒவ்வொரு கிரகத்திற்கும் தெரிந்து கொள்ளவேண்டிய ஐந்துவித பலங்களில் முதற்கண் வரும் 'கிரக பலம்' ஆகும். இனி, அதை அடுத்து வரும் ஸ்திதி-ஆதிபத்யம்-ஸம்பந்தம்-பார்வை என்னும் பலங்களை அறியவேண்டும்.

**ஸ்திதி பலம்:**—வான மண்டலத்தின் பன்னிரு பகுதிகளான இராசிகளுள் சனிக்கிரகத்திற்கு உரியது இரண்டு. இவை இரண்டும் முறையே பாகை இருநூற்று எழுபதுமுதல் முன்னூறு மட்டும் வரும் 'மகரமும்' (Capricorn) பாகை முன்னூறு முதல் முன்னூற்று முப்பது மட்டும் இடங்கொள்ளும் 'கும்பமும்' (Aquarus) ஆகும். இவ் இராசிகள் இரண்டும் சனிக்கிரகத்திற்கு அதன் சுபாவ பலன்களுக்குரிய ஆட்சி வீடுகள்; இவற்றுள் இரண்டாவதாக வரும் 'கும்பம்' என்னும் இராசி இடம் சனிக்குரிய சுபாவ பலன்கள் நேர்முகத்து நிகழ்வதற்கேற்ற இயல் வாய்ந்தது. முதற்கண்வரும் 'மகரம்' என்னும் இராசி இடம் அதற்குரிய சுபாவ பலன்கள் எதிர்முகத்து நிகழ்வதற்கேற்ற இயல்பினது. எனவே, இவ்வழி பலன் நிகழ்த்துவதில் 'நேர்முகச் சனி'—'எதிர்முகச் சனி' என வரும் இரண்டுவித பலங்களை முறையே மகர-கும்பங்களுக்குக் கொள்ளலாம்.

இவ் விரண்டினுள்ளும் நேர்முக பலனுக்குரிய இராசி இடமான 'கும்பம்' அதிக பலம் வாய்ந்தது. அத்துடன், அது ஸ்திர கேந்திர ராசிகளுள் ஒன்ருக விருத்தலின், சனிக்கிரகத்தின் சுபாவ பலன்கள் மேலும் பலம் மிகுத்ததாக விருக்கும். அதாவது பொருள் எல்லையில் ஸித்திகளின் தொடர்பு நெடுகிலும் படிப்பினைக் குரியதாக வாழ்க்கையின் நேர்மைகளுக்கு உயர்த்துவதாக விருந்து வரும். இந்த ராசியில் முதற்கண்ணுள்ள பாகை இருபது மட்டுமுள்ள இடம் சனிக் கிரகத்திற்கு 'மூலத் திரிகோண' பலங் கொண்டது. அதாவது பாகை முன்னூறு முதல் பாகை முன்னூற்று இருபது மட்டுள்ள இடம் சனிக்கு மூலத்திரிகோண பலத்திற்குரிய எல்லை யாகும்; 'மூலத் திரிகோண' பலம் என்பது 'ஆட்சி' என்னும் ஸ்வக்ஷேத்திர பலத்திலும் அதிக பலமும்-விசேஷமும் கொண்டதாகும். அதன்மேல் அவ் இராசியில் எஞ்சியபத்து பாகை அளவு கொண்ட இடம் முழுவதும்—அதாவது பாகை முன்னூற்று இருபது முதல் பாகை முன்னூற்று முப்பது வரையுள்ள இடம் ஆட்சி பலங் கொண்டதாய் சனிக்கிரகத்தின் நேர்முக இயலில் பலம் கொண்ட பலன்களுக்கு உரியதாக விருக்கும்.

பாகை நூற்று எண்பது முதல் பாகை இருநூற்று பத்து வரை இடங் கொள்ளும் 'துலாராசி' சனிக்கு 'உச்சி' பலத்திற் குரியது. இதில் முதற் கண்ணுள்ள பாகை இருபது மட்டுமுள்ள- அதாவது பாகை நூற்றுஎண்பது முதல் பாகை இருநூறு மட்டுள்ள எல்லை சனிக்கு 'அதிஉச்ச' பலமுள்ள இடமாக விருக்கிறது.

இந்த உச்சராசியான 'துலா'த்திற்கு எதிர்க்கோடியில், அதாவது ஸப்தம (ஏழாம்) ராசியான 'மேஷம்' (Aries) 'நீச' பலம் வாய்ந்தது. இதிலும் உச்ச ராசியிற் போலவே முதல் இருபது பாகை வரையுள்ள இடம் 'அதிநீச' பலம் உடைய தாகும். உச்சம்—அதி உச்சம் ஆகிய இந்த எல்லைகளோடு ஆறு ராசி அல்லது நூற்று எண்பது பாகை கூட்ட முறையே 'நீச' 'அதிநீச' எல்லைகள் வரும்.

மேலே கூறிய 'ஆட்சி'-'மூலத்திரிகோண—'உச்ச'—'அதி உச்ச'—'நீச'—'அதிநீச' எல்லைகளின் பலங்களில் சனிக்கிரக பலன்கள் யாவை என்று அதன் இயற்பலன்களில் தெளிதல் வேணடும். சனிக்கிரகத்தின் ஆட்சி இடங்களில் நேர்முக பலன்களுக்குரிய 'கும்ப'த்தில் 'மூலத்திரிகோண' பலம் வாய்ந்த எல்லையுள் பலம் மிக்க சிறந்த பலன்களும், அதன்மேல் அவ் இராசியின் அந்தம் மட்டும் 'ஆட்சி' பலனுக்குரிய தாகலின், சனியின் இயலிற் பலன்கள் நேர்முகத்து உள்ளதாகவும் இருக்கும். எதிர்முக பலன்களுக்குரிய 'மகரம்' என்னும் இராசியில் சனிக்கு 'மற்றொரு ஆட்சி இட மாகையால், அதில் அதன் ஆட்சி பல விசேஷம் எதிர் முகப் பலங் கொண்டதாக நேரும். அதாவது 'மகர'—'கும்பம்' என்னும் இராசிகள் இரண்டும் சனிக்குரிய ஆட்சி வீடுகளாயினும், அவை இரண்டிலும் முறையே எதிர்முக-நேர்முக இயல்களில் பலமும்-பலனும் சனிக்கிரகத்திற்கு வாய்க்கிறதென்று கொள்ளல் வேண்டும். இதில் எதிர்முக பலம் வாய்ந்த 'மகர' ராசி சரமாவதால், 'சனியின் பலன்கள் நல்ல சுழற்சியில் (Reputation) இடையீடின்றி நெடுகிலும் இருக்குமென்றும்; நேர்முக பலம் கொண்ட 'கும்பம்' ஸ்திரமாவதால், காலங் கடந்த அல்லது தாம் தங் கொண்ட ஸித்திகளாக நேருமென்றும் கொள்வர். இதனால், 'மகரச் சனி'யின் பலம் ராஜயோகங் கொண்டதாகக் கருதப்படுகிறது.

உச்ச ராசியான 'துலா'த்தில் அதிஉச்ச எல்லை மட்டும் இக ஸித்திகள் விசேஷ தரத்திலும், பாரமார்த்திக ஸித்திப் பேறுகளுக்கு அடிகோலிச் செல்வதாகவும்—அவ்வழி அதன்பலன் மிக உன்னதங் கொண்டிருக்கும். இதர எல்லையுள் அதற்குரிய உச்ச பலம் சாமான்யதரத்தில் நெடுகிலும் இருக்கும். இந்த உச்ச பலத்திற்குரிய 'துலாம்' சரராசிகளுள் முக்கியமான அயன பல விசேஷங் கொண்டதாக விருத்தலின், ராஜயோக பலன்கள் மிக உன்னதங்களில் நிகரற்றதாக விருக்கும். இதன் 'அதி உச்ச' எல்லையுள்-செவ்வாய்-ராகு இவற்றின் சாரம் ஆவதால், காய ஸித்தி-யோகமார்க்க ஆசிரயம்:ஞானார்த்த பாவம் இவை நிறைந்த

தொடர் கதை.

# தேவ தேவி

(வத்றப்-சு. மீ. கணபதி)



ஆகவே, 'நாம் சமையற் காரியைத் தேடுவதுதான் நலம்' என்று முடிவுக்கு வந்தான். நிபந்தனை போடாதபடி தன் பெண்ணை மணக்க அவள் கேட்பதை விட்டு, இல்லாவிடில் ஊருக்குப்போய் விடுவேன் என பயம் காட்டுகிருள். இதுபோன்று இங்கிருந்தால் அடிக்கடி எதை யாவது சொல்லிக் கொண்டிருப்பாள். முட்டாள்தனமாக, அவசரப்பட்டு அவளுக்கு எழுதியது தவறு. காலையில் ஊருக்கு அனுப்பி விட்டுத்தான் மறுவேலை பார்க்கவேண்டும். ஆனால், உடனே ஆளுக்கு எங்கேயாவது—சோமு சொல்லியபடி உண்மையில் ஆள் கிடைக்கும் வரை அவன் வீட்டில் வைத்துக் கொள்ள சம்மதிப்பானா? அவனைப் பற்றி சந்தேகம் கொள் கிருயே, மனதே அவன் போன்ற ஓர் உத்தம நண்பன் கிடைப்பது துர்லப மாயிற்றே. அவன் தான் உதவி செய்ய வேண்டும். நாம் கேட்குமுன்பு அவனே சொன்னான் என்ருலும், மறுபடியும் கேட்டுக் கொள்வது நலம் என்றவாறு வெகு நேரம் சிந்தித்துக் கொண்டிருந்தான்.

மனதில் எண்ணங்கள் புகுந்திருந்தால் தூக்கமேது? அதிகாலையிலேயே விழிப்பு ஏற்பட்டு விட்டது. நேராக சோமுவின் வீடு சென்ருன். வீட்டுக் கதவு திறக்கப்பட வில்லை. திரும்பிச் செல்லவும் மனம் வரவில்லை. அவர்கள் வீட்டுத் திண்ணையிலேயே மேல் துண்டியை விரித்துப் படுத்துக் கொண்டான். அவன் தூங்கித்தானிருக்க வேண்டும். ஏனெனில், பாரதியாரின் "பொழுது புலர்ந்தது, யாம் செய்த தவத்தால்" என்ற பள்ளி யெழுச்சி தன் காதில் ஒலிப்பது கிணற்றிலிருந்து கேட்பதுபோ லிருந்தது. நன்ருகத் தூக்கம் தெளிந்ததும், தன் தலைப் பக்கத்தில் சுந்திரா நின்று கொண்டு மெதுவாகப் பாடுவதைத் தெரிந்து கொண்டான். அவள் சிறிது நிறுத்தி "இன்னும் எழுந்திருக்க வில்லையே" என்று மெதுவாகக் கூறினாள். வாசுவுக்கு எங்கிருந்தோ ஆவேசம் வந்ததுபோல் பாரதியாரின் அழகு தெய்வப் பாட்டை "வயது பதினாறிருக்கும், இளவயது மங்கை" எனப் படுத்தபடியே பாட ஆரம்பித்து விட்டான். அது முடியும்வரை கேட்டுக்கொண் டிருந்து,

---

இக வெற்றிகளில் மேன்மைகளுக்குரிய பலன்களை ஒருவருக்குக் கூறலாம்.

இவ் இராசிக்கு நேர் ஏழாம் ராசி 'மேஷம்' சனியின் நீச-அதி நீச பலங்களுக்குரிய பலன்களை உச்ச—அதிஉச்ச பலன்களுக்கு நேர்மாருனதாகக் கொள்ளவும். ஆயினும், நீச-அதிநீச பலங்கள் பொருள் எல்லையில் நேரும் ஸித்திகளில் தொடர்ந்த தோல்விகளை-துன்பங்களை—இன்னும் வேண்டாத தொல்லைகளையே நெடுகிலும் பலனுக்கி, பொருள் எல்லையின் அப்பாலாய எல்லைகள் யாவினும் எய்துதற்கரிய அபூர்வங்களின் ஸித்திகளுக்குத் தயாராக்குகின்ற தென்பது இங்கு குறிப்பிடுவது அவசியமாகும்.

சுந்திரா, "தூங்குகிறீர்கள் என நினைத்தேன். தேவியின் தோத்திரப் பாட்டுகள் பாடாமல் எழுந்திருங்கள்" என்று உவகை பொங்கக் கூறினாள். தன்மேல் வாசுவுக்கு அன்பு பிறந்து விட்டது. இல்லை எனில் இதனைப் பாடமாட்டான். இதுவரை சுந்திராவின் முன் அவன் பாடியதுமில்லை. தன் எண்ணம் பலிதமடையும் என்று மட்டிலடங்கா மகிழ்ச்சியுடன் தன் சோதரனிடம் "அவர் எழுந்து விட்டார்" என புன்சிரிப்போடு கூறிக் கொண்டே அங்கிருந்து வேறு அறைக்கு ஓடினாள்.

இதைப் பார்த்துக்கொண் டிருந்த வாசுவுக்கு தான் பாடியது தவறு என்று புலப்பட்டது. அதற்குள் சோமுவும் எதிர்ப்பட்டு "கதவைத் தட்டியிருந்தால் திறந்திருப்பேனே. திண்ணையில் ஏண்டா படுத்தாய்? சுத்த அசடு" என்றான் சோமு.

"நான் சிறிது முன்புதான் விடிந்து விட்டது என எண்ணி வந்தேன். கதவு திறந்திருக்க வில்லை. சிறிது உட்காரலாமென நினைத்து உட்கார்ந்தேன். என்னை அறியாமலே தூங்கி விட்டேன் போலும். அதிருக்கட்டும்; இரவு நடந்த சம்பாஷணைகளை உனக்குச் சொல்லத்தான் நான் இங்கு இந்த வேளையில் வந்தது" என பூரா சம்பாஷணைகளையும் தெரிவித்து, "உன் அபிப்பிராய மென்ன?" என்று கேட்டான். "நான் சொல்லக்கூடிய தெல்லாம் அந்த அம்மாள் சொன்னபடி நீ நடந்து கொள்ள வேண்டும். வேறொன்று மில்லை" என்றான்.

வாசு:—"ஆனல் நீ சொல்லியபடி என் தகப்பனாரைச் சிறிது காலம் உன்னுடன் வைத்துக் கொள்ள மாட்டாயா?"

சோமு:—"நீ சொல்வ தொன்றும் புரிய வில்லை. அந்தம்மாள் சொல்லியதற்கு நீ ஒப்புக் கொண்டால் என்னிடம் உன் தகப்பனாரை விட்டு வைக்க வேண்டிய அவசியம்?"

வாசு:—உடனே தன் தீர்மானத்தையும், மனதில் உதித்த ஆட்சேப சமாதானங்களையும் கூறினான்.

சோமு:—"அப்பொழுதே இதையும் சொல்வதற் கென்னடா? கடைசி வரை வேண்டுமாகிலும் நான் அவரை என்னுடனேயே வைத்துக் கொள்கிறேன். இதைப்பற்றிய கவலை சிறிதும் உனக்கு வேண்டாம்."

வாசு:—"அதைத்தான் நான் விரும்பியது. சரி, நான் போய் அவர்களை அனுப்பி வைக்க வேண்டியவற்றைச் செய்ய வேண்டும். நான் வரட்டுமா? சாயந்திரம் உன்னைப் பார்க்கிறேன்" என்று வாசு கூறிக்கொண்டே நடந்தான்.

"திடீரென்று நீயாக ஒன்றும் சொல்லாதே. அவர்கள் கேட்டால் மாத்திரம் சொல்லு. தவிரவும், நிபந்தனையின்றி இருப்பதாகக் கூறின் வேண்டா மென்று மறுத்து விடுவதும் நியாய மல்ல. என்னடா நான் சொல்வது புரிகிறதா, இல்லையா?"

"குழந்தைக்குப் பாடம் சொல்லிக் கொடுக்கிறது போலிருக்கிறதே. எனக்கு எல்லாம் தெரியும். மாலையில் அவர்களை ஊருக்கு அனுப்பிவைத்து அந்த சந்தோஷச் செய்தியை உன்னிடம் தெரிவிக்கிறேன்" என்று கூறி வாசு சென்றான்.

மிக சாதாரணமான நிலையிலிருந்தவர், எதிர்பாராதபடி உயர்ந்த அந்தஸ்துக்கு வந்தால், சாதாரணமாக அவர்களின் நடவடிக்கைகளில் மாறுதல் ஏற்படுகிறது. தங்களுடைய பழைய நிலையை மறந்து விடுதல் சகஜம். பிறக்கும் பொழுதே பெரிய நிலைமையில் இருந்ததாகவே நினைப்பர். சிறிது தாழ்ந்த நிலையிலுள்ள உறவினரையும் மதிக்க மாட்டார்கள்.

இந்த உறவினர்களே இவர்களுக்கு உதவியு மிருந்திருக்கலாம். இதை மன தில் கொள்ளாமல் அலட்சியமாக நடந்து கொள்வார்கள். சிலர் தங்க ளுடைய பூர்வநிலையை அனுசரித்து நடந்து கொள்வதும் உண்டு. ஆனால் இவர்கள் அபூர்வம்.

காந்தனின் தகப்பனர் சிறிது நிலம் உடையவராகத்தா னிருந்தார். தன் மகன் நல்ல உத்யோகம் பார்க்கவேண்டும், அதற்கு வேண்டியதைச் செய்வதில் பின்வாங்கக் கூடாது; இருந்தால் சாப்பிடலாம், இல்லையெனில் பட்டினி இருக்கலாம் என்ற முடிவுக்கு வந்தார். அவர் எதிர்பார்த்தபடி பையனும் புத்திசாலியாகவே இருந்தான். அவனுக்கு உபகாரச் சம்பள மும் கிடைத்தது. தன் ஊரிலேயே பத்தாம் வகுப்பு வரை படித்தான். அதற்குமேல் அவ்வூரில் படிக்கப் பள்ளி கிடையாது. நிலத்தில் பாதிவிற்று அவனைப்படிக்க வைத்தார். காலேஜிலும் உபகாரச் சம்பளம் கிடைத்தது. பையன் பட்டின வாசத்தில் கெட்டு விட்டால், தன் முயற்சிகளெல்லாம் பாழாகி விடும் என நினைத்து, தன் நிலங்களைப் பார்த்துக்கொள்ள ஆள் நியமித்து குடும்ப சகிதம் மதுரபுரியிலேயே காலம் கழித்து வந்தார். இவ ருக்கு ஒரு தொழிலும் கிடையாது. விவசாயம்தான் பார்த்துக் கொண் டிருந்தார். தன் பையன் எம். ஏ. பரீட்சை பாஸ் செய்வதற்குள் மீத மிருந்த நிலத்திலும் சிறிது விற்கவேண்டி நேரிட்டு விட்டது. அதன் பின்பு தன் கிராமத்திற்குச் செல்ல எண்ணினர். கிராமத்திற்குச் சென்றால் காந் தனுக்கு வேலை கிடைக்குமா என்ற சந்தேகம். ஆகவே, பின்னும் சிறிது காலம் அங்கிருக்கவே விரும்பினர்.

இதன் மத்தியில் காந்தனுக்குப் பெண் கொடுக்கப் பலர் முன் வந்தனர். முதலில் அவரும் அவர் மனைவியும் அவன் மணத்தை நிறைவேற்றுவதில் மிகுந்த ஆவல் காண்பித்தனர். வருகிறவர்களெல்லாம், தன் விற்ற நிலத் தின் அளவு கூடக் கொடுக்க முடியாத நிலையிலிருந்தனர் என்பது தெரிந் தது. விற்ற நிலத்தை வரதட்சிணையால் திருப்பி விடவேண்டும் என்றே அவர் மனம் கூறிக்கொண்டிருந்தது. இவருடைய நண்பர்களில் பலர், காந்தனை மேல் படிப்புக்கு சீமைக்கு அனுப்பும்படி கூறி வந்தனர். முத லில் இதனை அவர் விரும்பவில்லை. கடல்தாண்டிச் செல்வது ஆசாரக் குறைவு. ஜாதிப்பிரஷ்டம் ஆனாலும் ஆகும் எனவே சிந்தித்தார். 'கரைத்தால் கல்லும் கரையு' மென்றபடி இவரும் பலர் சொல்லியபடி தன் காந்தனை சீமைக்கு அனுப்பத் துணிந்தார். இருக்கும் நிலம் எல்லாவற்றை யும் விற்றால் கூட போக வரச் செலவுக்குத்தான் ஆகும். ஆசை இருக் கிறது. வரதட்சிணை கொடுப்பவர்கள் அதிகம் கொடுத்து அது காண வில்லை என்றால், இருக்கும் நிலத்தையும் விற்றுவிட்டால் போகிறது. அவன் போய் பாஸ் செய்துவந்தால் எவ்வளவோ நிலங்களைத் திரும்ப வாங்க லாம். நமக்கென்ன வேறு பிள்ளையா குட்டியா? இருப்பது இவன் ஒருவன் தானே! தகப்பனரின் கடமையை இது விஷயத்தில் பூரணமாகச் செய்ய வேண்டும். எவரும் செலவு ஆகக்கூடிய பணம் கொடுக்கவில்லை யென் றால் அடுத்த வருஷம் பார்த்துக்கொண்டால் போகிறது என்று தன் மனை விக்குச் சமாதானம் சொல்லி வந்தார்.

(தொடரும்)

## சுபானு ஹூ புரட்டாசிமீ நவக்கிரக * நிராயன சுத்த ஸ்புடம்

(இந்தியா ஸ்டாண்டர்ட் கடியாரமணி-சென்னை காலை 7-மணிக்கு)

| தேதி | நக்ஷத்திர ஹோரை (ம நி ச) | சூரியன் (பா க) | சந்திரன் (பா க) | அங்காரகன் (பா க) | புதன் (பா க) | குரு (பா க) | சுக்கிரன் (பா க) | சனி (பா க) | †ராகு (பா க) |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | 23 40 16 | 149 47 | 8 27 | 49 10 | (வ) 164 55 | 113 54 | (வ) 133 35 | 63 13 | 110 52 |
| 2 | 23 44 13 | 150 46 | 22 22 | 49 36 | 164 20 | 114 06 | 133 11 | 63 16 | 110 48 |
| 3 | 23 48 09 | 151 45 | 34 23 | 49 56 | 164 01 | 114 18 | 132 51 | 63 18 | 110 45 |
| 4 | 23 52 06 | 152 44 | 46 25 | 50 27 | 163 43 | 114 29 | 132 31 | 63 20 | 110 42 |
| 5 | 23 56 02 | 153 43 | 59 43 | 51 51 | 162 14 | 114 41 | 132 15 | 63 22 | 110 39 |
| 6 | 23 59 59 | 154 42 | 73 02 | 51 16 | 160 45 | 114 52 | 132 00 | 63 24 | 110 36 |
| 7 | 0 03 56 | 155 41 | 84 54 | 51 39 | 159 40 | 115 03 | 132 49 | 63 26 | 110 33 |
| 8 | 0 07 52 | 156 40 | 96 47 | 52 03 | 158 33 | 115 15 | 131 38 | 63 28 | 110 30 |
| 9 | 0 11 48 | 157 39 | 108 35 | 52 25 | 157 31 | 115 26 | 131 32 | 63 30 | 110 27 |
| 10 | 0 15 45 | 158 38 | 120 23 | 52 48 | 156 27 | 115 37 | 131 27 | 63 31 | 110 23 |
| 11 | 0 19 42 | 159 37 | 132 22 | 53 09 | 155 28 | 115 48 | 131 26 | 63 33 | 110 20 |
| 12 | 0 23 39 | 160 36 | 144 21 | 53 31 | 154 30 | 115 59 | 131 25 | 63 34 | 110 17 |
| 13 | 0 27 35 | 161 35 | 157 11 | 53 51 | 153 44 | 116 10 | வ தி 131 29 | 63 35 | 110 14 |
| 14 | 0 31 42 | 162 34 | 169 02 | 54 12 | 152 58 | 116 21 | 131 33 | 63 36 | 110 11 |
| 15 | 0 35 28 | 163 33 | 181 48 | 54 32 | 152 29 | 116 32 | 131 41 | 63 37 | 110 07 |
| 16 | 0 39 25 | 164 33 | 194 34 | 54 51 | 152 01 | 116 43 | 131 49 | 63 38 | 110 04 |
| 17 | 0 43 21 | 165 32 | 207 45 | 55 10 | 151 53 | 116 54 | 132 01 | 63 39 | 110 00 |
| 18 | 0 47 18 | 166 31 | 220 56 | 55 28 | 151 45 | 117 04 | 132 14 | 63 40 | 109 57 |
| 19 | 0 51 14 | 167 30 | 234 31 | 55 45 | வ தி 151 58 | 117 15 | 132 31 | 63 41 | 109 54 |
| 20 | 0 55 11 | 168 29 | 248 07 | 56 02 | 152 11 | 117 25 | 132 48 | 63 41 | 109 50 |
| 21 | 0 59 07 | 169 28 | 262 06 | 56 19 | 152 43 | 117 36 | 133 08 | 63 41 | 109 47 |
| 22 | 1 03 04 | 170 27 | 276 05 | 56 33 | 153 16 | 117 46 | 133 29 | 63 41 | 109 44 |
| 23 | 1 07 01 | 171 26 | 290 26 | 56 48 | 154 06 | 117 53 | 133 53 | 63 41 | 109 40 |
| 24 | 1 10 58 | 172 25 | 304 48 | 57 02 | 154 57 | 118 06 | 134 18 | 63 41 | 109 37 |
| 25 | 1 14 54 | 173 24 | 320 51 | 57 15 | 156 01 | 118 16 | 134 45 | 63 41 | 109 34 |
| 26 | 1 18 51 | 174 23 | 336 55 | 57 28 | 157 05 | 118 26 | 135 12 | 63 41 | 109 31 |
| 27 | 1 22 47 | 175 22 | 349 48 | 57 40 | 158 21 | 118 36 | 135 43 | 63 41 | 109 27 |
| 28 | 1 26 24 | 176 21 | 2 42 | 57 52 | 159 38 | 118 45 | 136 14 | 63 41 | 109 24 |
| 29 | 1 30 20 | 177 20 | 16 31 | 58 03 | 161 03 | 118 55 | 136 47 | (வ) 63 40 | 109 20 |
| 30 | 1 34 17 | 178 19 | 30 20 | 58 13 | 162 29 | 119 04 | 137 21 | 63 40 | 109 17 |
| 31 | 1 38 13 | 179 19 | 43 22 | 58 23 | 164 00 | 119 14 | 137 57 | 63 39 | 109 13 |

ஆகாயக் காட்சி:—இம்மாதம் குறிப்பிடத்தக்கன வெதுவும் வானத்தே நிகழுவதில்லை.

பிரவேசங்கள்:—1உ மணி 12-22க்கு சூரியன் சிம்மமிருந்து கன்னியா ராசிக்குப் பிரவேசிக்கின்றது. 2உ புதன் பஸ்சாத் (மேற்கில்) வக்ராஸ்தமனம். 16உ கிழக்கே உதயம். 18உ வக்ரத்யாகம். 12உ சுக்ரன் வக்ரத்யாகம். 21உ சனி ஸ்தம்பனம்; 24உ வக்ராரம்பம்.

* அயனாம்சம் பா-22 கலை-56 விகலை 19·9435 கூட்ட சாயன ஸ்புடம் வரும்.

† ஆறு ராசி அல்லது பாகை 180 கூட்ட கேது ஸ்புடம் வரும்.

# "ஆனந்தபோதினி" பஞ்சாங்கம்.

சுபானுஹு புரட்டாசிமீ கலியுகாதி 5045, சாலிவாகனம் 1866
பசலி 1353, கொல்லமாண்டு 1119, ஹிஜிரா 1362
இங்கிலீஷ் 1943ஹு செப்டம்பர்மீ—1943ஹு அக்டோபர்மீ

| புரட்டாசி | செப்டம்பர்மீ | வாரம். | திதி. | நக்ஷத்ரம் | யோகம். | விசேஷங்கள் |
|---|---|---|---|---|---|---|
| 1 | 17 | வெள் | சது 52-07 | அசு26-55 | அ26-55சி | ஷடசீதி புண்ய காலம் |
| 2 | 18 | சனி | பஞ்51-13 | பர27-37 | அ27-37சி | பரணி மஹாளயம் |
| 3 | 19 | ஞா | சஷ்51-10 | ❋28-48 | சித்60 | கிருத்திகை விரதம் |
| 4 | 20 | திங் | சப்50-24 | ரோ30-36 | அமி60 | கிருஷி சம்பந்தங்கள் |
| 5 | 21 | செவ் | அ52-17 | மிரு34-17 | சி34-17ம | ருத்ர - மத்யாஷ்டமி, மகா லக்ஷ்மி விரதம் |
| 6 | 22 | புத | நவ56-23 | திரு38-55 | சித்60 | துர்க்கா நவமி (மஹாராஷ்டி |
| 7 | 23 | வியா | தச60-00 | புன44-53 | அமி60 | ஹரிசங்கர யோகம் [ரதேசம்) |
| 8 | 24 | வெள் | கச0-29 | பூச51-03 | சி51-03ம | தெய்வகதமான சுபகரங்கள் |
| 9 | 25 | சனி | ஏ5-56 | ஆ57-33 | ம57-33அ | சர்வ ஏகாதசி |
| 10 | 26 | ஞா | து11-25 | மக60-00 | மர60 | ப்ரதோஷம், கலியுகாதி |
| 11 | 27 | திங் | திர16-12 | ,, 3-31 | ம3-31சி | கேதார விரதம், மாச சிவரா |
| 12 | 28 | செவ் | சசி20-23 | பூர9-35 | சி9-23அ | சஸ்திர ஹத மாளயம் [த்திரி |
| 13 | 29 | புத | ●23-27 | உத்14-29 | அ14-29ம | சர்வ பிதுரு - மஹாளய அமா வாஸ்யை, ஆலய நவராத்ரி |
| 14 | 30 | வியா | பிர25-51 | அ18-37 | சித்60 | ஆஸ்விஜ சுத்தம் [ஆரம்பம் |
| 15 | 1 | வெள் | துதி26-53 | சித்20-23 | சித்60 | தெய்வகதமான சுபகரங்கள் |
| 16 | 2 | சனி | திரு23-29 | சு22-17 | சித்60 | கரிநாள, சுபம் விலக்க |
| 17 | 3 | ஞா | சது24-37 | வி22-07 | மர60 | சதுர்த்தி விரதம் [தம் |
| 18 | 4 | திங் | பஞ்22-12 | அ20-10 | சித்60 | உபாங்க லலிதா கௌரீ விர |
| 19 | 5 | செவ் | சஷ்17-55 | கே19-10 | ம19-10அ | சஷ்டி, சரஸ்வதீ பூஜா ஆர |
| 20 | 6 | புத | சப்13-13 | மூல16-47 | ம16-47அ | துர்காஷ்டமி [ம்பம் |
| 21 | 7 | வியா | அ8-25 | பூர13-11 | சித்60 | சரஸ்வதி பூஜை, ஆயுதபூஜை |
| 22 | 8 | வெள் | நவ3-03 தச57-11 | உத்9-35 | சி9-35ம | விஜயதசமி |
| 23 | 9 | சனி | ஏ51-18 | திரு5-55 | சித்60 | |
| 24 | 10 | ஞா | துவ45-13 | அ1-47 சத57-33 | ம1-47சி | |
| 25 | 11 | திங் | திர39-36 | பூ53-29 | ம53-29சி | |
| 26 | 12 | செவ் | சசி34-51 | உட்50-23 | அ50-23சி | |
| 27 | 13 | புத | ப○30-33 | ரே48-35 | மர60 | |
| 28 | 14 | வியா | பிர27-03 | அசு47-24 | அ47-24சி | |
| 29 | 15 | வெள் | துதி24-37 | பர46-48 | சித்60 | |
| 30 | 16 | சனி | திரு23-24 | ❋47-33 | அமி60 | கிருத்திகை விரதம் |
| 31 | 17 | ஞா | சது24-11 | ரோ49-17 | சித்60 | விஷு புண்ய காலம் |

(Column 2 lower portion: 1943ஹு அக்டோபர்மீ)

| | | | |
|---|---|---|---|
| | | செவ் | சனி |
| | 12-வ-தியா-சு<br>17- ,, பு<br>24 - வக்-சனி | | குரு ராகு |
| கே | | | சுக் |
| | | | சூ-பு |

EDITED, PRINTED & PUBLISHED BY N. MUNISAWMY MUDALIAR,
AT THE "ANANDA BODHINI" PRESS,
No 6, LAWYER CHINNATHAMBI MUDALI STREET, MADRAS.

# மதன கோலாகல தங்கமாத்திரை

இம்மருந்து தாதுபுஷ்டியைத் தருவதில் நிகரற்றது. இதில் கஞ்சா, அபின் முதலிய லாகிரி வஸ்துக்கள் சிறிதும் சேர்க்கப்படவில்லை. வயது முதிர்ந்த காரணத்தாலும், உலக இச்சை இல்லாதவர்களும் இழந்த பலத்தை இம்மருந்து ஆச்சரியப்படத்தக்க விதமாய் உண்டாக்கி ஒரு விதமான சுறுசுறுப்பையும் கொடுக்கும். இதுவன்றி வேறு எந்த நோயினு லுண்டான பலவீனமும் இம்மருந்தினால் நீங்கும். இரத்த விருத்தியை யுண்டாக்கி நரம்புகளுக்கு உறுதியைக் கொடுக்கும் தன்மையில் இது கைகண்ட மருந்து. வயோதிகமே தெரியாது. களைப்பும் தோன்றாது. சோர்வையும் சோம்பலையும் நீக்கித் தேக பலத்தைக் கொடுக்கும்.



இது, தங்கம், வெள்ளி, முத்து, அயம், காந்தம் முதலிய உயர்ந்த உலோகச் சரக்குகளும், சஞ்சீவிக்கு நிகரான பல மூலிகைகளும் சேர்க்கப்பட்டு சிறந்த கைபாக செய்பாகங்களாய் தயாரிக்கப்பட்டது.

இதனை ஒரு முறை வாங்கி உபயோகித்தால் இதன் மேலான குணம் தானே தெரியும். 20-மாத்திரைகொண்ட சீசா 1-க்கு விலை ரூபா 2.

# சர்வபடை சம்மாரன்



சரீரத்தின் இடுக்கான இடங்களாகிய துடையின் இடுக்கு, அக்குள், இடுப்பு முதலிய இடங்களில் சிறிது சிறிதாகப் படர்ந்து இரவில் ஓயாத நமைச்சலைக் தந்து நித்திரையைப் பங்கப்படுத்திச் சரீரத்துக்கு அதிக கஷ்டத்தை உண்டுபண்ணும் படைகள், ஒரே தடவையில் இந்தச் சர்வபடை சம்மாரன் என்னும் தைலத்தை உபயோகித்த மாத்திரத்தில் சூரியனைக்கண்ட பனிபோல் நீங்கும்.

புட்டி 1-க்கு விலை அணு 4. தபாற்கூலி வேறு.



# கண்நோய் மருந்து

இது கண்நோய், கண்ருத்தல், கூசல், நீர் வடிதல், மங்கல், அந்திமாலை, பீளை கட்டல். சதை வளர்ந்திருத்தல், கண் சிவப்பு, எரிச்சல், கண் இமை புருவம் இவைகளில் வலி, கண் புகைச்சல் இவைகளைக் குணப்படுத்தும். மாணக்கர்களுக்கும் ஆழ்ந்த பார்வையோடு வேலை செய்பவர்களுக்கும் இது மிகச் சிறந்த ஔஷதம். இதை உபயோகிப்பவர் கண்ணாடி போடவேண்டியதில்லை.

புட்டி 1-க்கு அணு 10. தபாற்கூலி வேறு.

---

# புத்திர சந்தான எண்ணெய்



ஆண்மலடு சொன்னலும் சொல்லலாகும்
அப்பனே பெண்மலடு யாரு மில்லை
ஏன்மலடாய்ப் போவதென்று கேட்பா யாகில்
இயம்புவேன் கருக்குழியில் சோரிசேர்ந்தால்
ஊன்மிகுந்தால் புழுதரித்தால் உதிரங் கெட்டா [ல்
ஓங்கார பிரணவத்தில் வாயு சேர்ந்தால்
தான்மதத்து விபரீதச் சேர்க்கை செய்தால்
தலையாட்டுப் பேய்பிணியால் தரியா தென்னே

ஸ்திரீகளின் கருக்குழியினிடத்தில் புழுக்கள் உண்டாகி அவ்வப்போது வித்தைப் புசித்துவிடுவதனலும், விபரீதச் சேர்க்கையாலும், கருக்குழியினிடத்தில் சதை வளர்ந்து சோறி பற்றி இரத்தங் கட்டியிருப்பதாலும், கருக்குழி மதத்துக் கொழுத்திருப்பதாலும், மூலச் சுழியில் வாயு பித்தம் தங்கியிருப்பதனலும் கரு தரிக்காது.

இந்த எண்ணெயைக் காலை மாலை இருவேளையும் 1 அல்லது 2 காசு அளவு உள்ளங்கையில் விட்டுச் சாப்பிடவேண்டியது. இப்படி 15-நாள் சாப்பிட்டால் இது கருக்குழியிலிருக்கும் சகல குற்றங்களை நீக்கி, கருக்குழியைச் சுத்தப்படுத்தி, மறு மாதத்திலேயே கரு தரிக்கும்படி செய்யும். இது அனுபவமான எண்ணெய். இதற்குக் கடுமையான பத்தியம் கிடையாது.

சிலருக்கு கருதரித்து 2, 3, 4-மாதங்கள் வரையில் தங்கியிருந்து திடீரென்று உடைந்துபோவதுண்டு. இவ்வகைத் தோஷமும் இந்த எண்ணெயில் நிவர்த்தியாகித் தீர்க்காயுளான கரு தரிக்கும். இதன் விலை ரூபா 2.



# சீதபேதி (டிசென்டரி) பவுடர்

இரத்தபேதி, சீதபேதி, சீதமும் இரத்தமும் கலந்த பேதி, மலத்துடன் இரத்தம் வருதல், மூலக் கடுப்பு அடிவயிற்று நோய் முதலான வியாதிகள் குழந்தைகள் முதல் பெரியோர் வரையில் யாருக்கிருந்தாலும் 4-வேளையில் இது அவற்றைத் தப்பாமல் தடுக்கும்.

ஒரு புட்டியின் விலை அணா 8.

# குழந்தை கக்குருமல் நிவாரணி

இம்மருந்து கக்குவானல் கஷ்டப்படும் பிள்ளைகளுக்கு ஓர் ரக்ஷிணி. இது வெகு நேர்த்தியாகவும், சுகமாகவும், குழந்தைகள் சாப்பிடுவதற்கு இனிப்பாக இருக்கும். இரண்டு மூன்று நாட்களில் கக்குருமல் நேரம் பொறுத்து கொஞ்சம் கொஞ்சமாக வந்து சில நாளைக்குள் பூர்த்தியாக குணத்தைத் தரும். இதை உபயோகிக்கும் விதம் மருந்துடன் அனுப்பப்படும்.

புட்டி 1-க்கு விலை ரூபா 1—4—0- தபாற் செலவு பிரத்தியேகம்.

---

**தனலட்சுமி கம்பெனி, நெ. 6, லாயர் சின்னதம்பி முதலி தெரு, மதராஸ்.**

# அயத்தங்கத் திராவகம்

மித்திரர்களே! இந்த அபூர்வ மருந்தானது அநேக கொடிய வியாதிகளை ஆச்சரியமாகக் கண்டிக்கக் கூடியது. இதை அநேக ஆயிரக் கணக்கான ஜனங்கள் உபயோகித்துச் சந்தோஷிக்கின்றனர். வியாதியினாலாவது வேறு எந்தக் காரணத்தினாலாவது இளைத்துப்போயிருக்கும் தேகத்தைப் புஷ்டியாக்கி பலவிருத்தி தருவதில் இது நிகரற்ற மருந்தாகும். ஆங்கிலேய முறைப்படி தயாரிக்கப்பட்ட அருமையான மருந்து. சாப்பிடுவதற்கு மிக இன்பமாயிருக்கும். இருமல் நோய்கண்டு அவஸ்தைப்படுபவர்கள் இதை உட்கொண்டால் இரண்டே வேளையில் ஆச்சரியமான சுகத்தை யடைவார்கள். இதனால் உண்டாகக் கூடிய அநேக குணங்களில் முக்கியமான சிலவற்றை இங்கே குறிக்கிறோம்.



இது, நரைத்த மயிரைக் கருப்பாக்கும், உஷ்ணத்தினாலாவது, புழு வெட்டினாலாவது மயிர் உதிர்வதை நிறுத்தும்: இதனால் நீர் வியாதிகள் தீரும். கண்ணெரிச்சல், கை கால் காந்தல் இவை தீரும். இன்னும் இது முக வசீகரத்தை உண்டாக்கும். தேக அசதியை யோட்டும். ஜீரண சக்தியையும், நல்ல பசியையும் உண்டாக்கும். மனதை அதிக உற்சாகப்படுத்தும், நரம்புகளுக்கு அதிக வலுவைத் தரும், தேகத்தில் நல்ல இரத்தத்தைச் சுரப்பிக்கும், க்ஷயரோகத்தை க்ஷணத்தில் தீர்க்கும், சத்த தாதுக்களுக்கும் நல்ல பலத்தை தரும், மூலச்சூடு, மூலவாய்வு, மலச்சிக்கல் ஆகியவை தீரும்.

இந்தச் சஞ்சீவியை நல்ல போஜனத்துடன் 15 நாள் சாப்பிட்டால் இணையில்லாத ஆனந்தத்தைத் தரும். மனிதர் தாம் இழந்துபோன தேக திடத்தைப் பழையபடி யடைவதற்கு இதைவிட வேறு மருந்தே கிடையாது. ஒருவர் 40-நாள் மருந்தை உட்கொள்ளும் பக்ஷத்தில் அவனுடைய தேகம் வஜ்ஜிரமேயாகும். இதற்கு யாதொரு பத்தியமும் கிடையாது.

20-நாள் மருந்து விலை ரூபா 1. 40-நாள் மருந்து விலை ரூபா 1-12-0.

# நரை மயிர் கருக்குந் தைலம்



தற்காலத்தில் பலவிதமாகச் செய்து விற்கப்பட்டு வருகிற கப்புகள் மயிரைச் செம்பட்டையாகவும், பசுமை நிறமாகவும், சாம்பல் வர்ணமாகவும் ஆக்கி விகாரப்படுத்தி விடுகின்றன. நமது தைலமோ நரைத்த மயிருக்குப் பூசிய 3 நிமிஷத்திற்குள்ளாக நரைப்பதற்கு முன்பிருந்த கருமை நிறத்தையும் பளபளப்பையும் உண்டுபண்ணும், மேலே கூறியுள்ள விகார குணங்கள் இதில் உண்டாகமாட்டா. இதைப் பூசிய பிறகு முகலட்சணமும் வசீகரமு முண்டாகிறபடியால் வயோதிகரும் வாலிபரைப்போல் தோற்றப்படுவார்கள். இதை உபயோகிக்கும் விதம் பார்சலோடு தெரிவிக்கப்படும். இதன் விலை ரூபா 1.

---

**தனலட்சுமி கம்பெனி, நெ. 6, லாயர் சின்னதம்பி முதலி தெரு, மதராஸ்.**

திரு. வி. க. மணிவிழா வெளியீடு.

"ஜீவா" தீட்டிய
உன்னத சமூக சித்திரம்

# "யான் ஏன் பெண்ணாய்ப் பிறந்தேன்?"

(விதவைப் பெண்ணொருத்தியின் உள்ளம் உருக்குங் கதை)

## திருத்தமான இரண்டாம் பதிப்பு

'சாரதா வித்யாலயா' தலைவி சகோதரி ஆர். எஸ். சுப்புலட்சுமி, பி. ஏ., எல். டி., பண்டிதை அசலாம்பிகை ஆகியோர் சிறப்புரைகள் கொண்டது.

*இக் கதையில் வரும் கதாநாயகி காமாட்சியின் சித்திரம் தமிழ்ச் சமூகத்தில் நிலவிவரும் வைதவ்யத்தின் சித்திரமாகும்.*

"மண்பிறந்த மறிகடல் சூழ் உலகத்தில் வாழ்பவரில்
பெண்பிறந்தார் யான்பட்ட பெருந்துயரம் யார் பட்டார்?"

*என்று காமாட்சி கைம்மை நிலையில் தான் அனுபவித்த கஷ்டங்களை நினைத்துக் கதறுகிறாள். அவள் தன் சுயசரிதையைக் கூறுவது வாயிலாக, பெண் குலத்தின் சரித்திரத்தையும், பெண்மணிகளின் உள்ள உணர்ச்சிகளின் எழுச்சி வீழ்ச்சிகளையும் ஒன்றோடொன்று ஒன்றியும் பகைத்தும் உண்டாக்கும் விளைவுகளையும் நன்கு விவரிக்கிறாள்.*

ஆண் பெண் அனைவரும் படிக்கவேண்டிய சிறந்த புத்தகம்
அழகிய சித்திரப் படங்களுடன் வெளிவந்து விட்டது!

**இன்றே ஒரு பிரதிக்கு ஆர்டர் செய்யுங்கள்**

**விலை ரூபாய் ஒன்று.**

ஆனந்தபோதினி ஆபீஸ், தபால்பெட்டி நெ. 167, மதராஸ்.

Edited, Printed and Published by N. MUNISAMI MUDALIAR, at the "ANANDA BODHINI PRESS," No. 6, Lawyer Chinnathambi Mudali Street, Sowcarpet, Madras.